# உட்புறங்களுக்கும், வெளிப்புறங்களுக்கும் ஈடிணையற்ற அழகிற்கும், நிரந்தரத்தன்மைக்கும்...








**ஸில்விக்ரீட் ஏஸிஸி** வெள்ளை சிமெண்டை கண்கவர் பாணிகளிலும், வண்ணங்களிலும் அமைத்துக் கொள்ளலாம்; அதைக் கொண்டு டெகோரேடிவ் பேனல்களையும், டைல் அல்லது டெர்ராஸோ தரைகளையும், ஜாலிகளையும், கொடிவிடுகளையும் சுலபமாக அமைத்துக் கொள்ளலாம்.

அசல் போர்ட்லாந்து சிமெண்டின் உறுதியும், நீடித்து நிற்கும் தன்மையும் உடையதாக இருப்பதனால், அது நிரந்தரமானதாக விளங்குகிறது.

**ஸில்விக்ரீட்** எவ்வளவு வேண்டுமானாலும், அருகிலுள்ள சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட் கிளையிலோ, அவர்களுடைய விநியோகஸ்தர்களிடமோ கிடைக்கிறது.

**ஸ்னோஸெம்** மற்றும் **கலர்க்ரீட்டின்** தயாரிப்பில் மூலப் பொருளாக இருப்பது **ஸில்விக்ரீட்.**

**ஏஸிஸி** நாட்டில் உயர்ந்த தயாரிப்புகளுக்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்

தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனிஸ் லிமிடெட்.

தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்.

SISTA'S-CMI-[illegible]

சாதாரண, ஐப்பசி 22 ● 1970, நவம்பர் 8

# கல்கி

## பொருளடக்கம்





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |


ஆ! இன்னமும் ஏன் முழுகி விடுவோமோ என அஞ்சுகிறேன்?
பாரத ராஷ்டிரபதி: உயிர் காக்கும் மிதப்பு வளையம்
PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்





# சோஷலிஸமா? காந்தீயமா?

**வ**ருமானத்தில் ஏற்றத் தாழ்வு இருப்பதை விட, அதிகார சக்தியில் இருக்கும் ஏற்றத் தாழ்வே மிகக் கெடுதலானது. நிறையச் செல்வம் படைத்தவனைக் கண்டு பிறருக்குப் பொறாமை எழுகிறது என்பது தவிர, அவனால் மற்றவர்களுக்குத் தீங்கு இல்லை. ஆனால் நிறைய அதிகாரம் படைத்தவனே பிறரின் சுதந்திரத்தையும் மகிழ்ச்சியையும் அபகரித்துக்கொண்டே இருக்கிறான். தன்னைப் போல அதிகாரம் பெற்றிராதவர்கள் சுதந்திரமாக இருக்கும்படி அவன் விட்டு வைப்பதில்லை.

ஒருசிலரிடம் அதிகார சக்தியை ஒப்புவிப்பதுதான் இப்போது சோஷலிஸம் என்ற பெயரில் நடந்து வருவது. அரசாங்கம் பொருளாதாரத்தை நிர்வகிப்பது தான் சோஷலிஸம் எனப்படுகிறது. ஆனால் அரசாங்கம் என்பது என்ன என்று பார்த்தால் அதிகாரத்தில் உள்ள ஒரு சிலரே என்றாகிறது.

இவ்விதம் ஒருசில அரசாங்கத் தலைவர்களையும், அதிகாரிகளையும், பார்லிமெண்ட் அங்கத்தினரையும் மட்டுமே சார்ந்திராமல் சோஷலிஸ்ட்கள் கூறும் சமத்துவ—சுபிட்ச லட்சியத்தை அடைவதெப்படி என்று நாட்டின் அறிஞர்களும், நல்லவர்களும் சிந்திக்க வேண்டும். சோஷலிஸ சர்க்கார் ஆதீனம் இல்லாமலே இந்த லட்சியத்துக்கு காந்திஜியும், வள்ளுவரும் வழி கூறினர். செல்வம் படைத்தவர்கள் சுயமாகவே தர்மகர்த்தா உணர்வோடு சமூகம் அனைத்துக்கும் செல்வத்தைப் பயன்படுத்த வேண்டும் என்று காந்திஜி கூறினார். இதுவே குறள் கூறும் ஒப்புரவு முறை. இவ்வாறு ஒருவர் பிறருக்குச் சுயமாக உதவும்போது, பெறுபவரை விடக் கொடுப்பவரே அதிகம் மகிழ்ச்சி அடைகிறார். பிறருடன் செல்வத்தைப் பகிர்ந்து கொள்வது பிச்சை போடுவது போன்றதல்ல. இது பணக்காரரின் சமூகக் கடமையே ஆகும்.

நாம் ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர் என்ற உணர்வு கொண்டவர்கள். சர்க்காரையே சார்ந்து நிற்கும் சோஷலிஸம் இல்லாமல், பல சமுதாயப் பிரிவுகளைக் கொண்டு மக்களே தங்களை நிர்வகித்துக் கொள்ளும் அமைப்பு நம் நாட்டில் ஏற்பட்டது. இது ஒரு மகத்தான பிதுரார்ஜிதச் செல்வம். இதற்கு வகுப்புவாதம் என்று கெட்ட பெயர் சூட்ட வேண்டியதில்லை. இந்தச் சமூகப் பிரிவுகளை அகற்றிவிட்டு அதற்குப் பதில் சுதந்திரத்தைக் குலைக்கும் சோஷலிஸத்தைப் புகுத்த வேண்டியதில்லை.

ஒப்புரவு தர்மப்படி முதலாளிகள் சமுதாயத்தினரோடு செல்வத்தைப் பகிர்ந்து அநுபவிக்காவிடில், தொழிற் சங்கங்களோடு ஓயாமல் சண்டையும் சமரசமும் செய்து கொண்டு அவதிப் படவேண்டியதுதான். முதலாளிகள் சமுதாயப் பொறுப்பை ஆற்றாமல், தாம் மட்டும் தனித்து வாழ்ந்தால், தொழிற் சங்கங்கள் அனைத்துமாகச் சேர்ந்து நாட்டில் இரண்டாவது அரசாங்கம் போல் சக்தி பெறுவதைத் தவிர்க்க முடியாது. இவ்விதம் பார்லிமெண்ட் சர்க்கார், தொழிற் சங்க சர்க்கார் இரண்டும் நாட்டில் ஆதிக்கம் பெறுமாயின், குழப்பம் தவிர வேறெதுவும் விளையாது. இதில் ஓயாமல் சச்சரவும், வகுப்புத் துவேஷ மனப்பான்மையும்தான் நிலவும்.

சோஷலிஸத்துக்குப் பதில் நான் சொல்லும் சமூகப் பிரிவினரின் பரஸ்பர நேசத்தைச் சார்ந்த தர்மகர்த்தா—அல்லது ஒப்புரவு—முறையை ஏற்பது காரிய சாத்தியமற்ற பத்தாம் பசலித்தனம் எனச் சிலருக்குத் தோன்றலாம். இப்படி நினைப்பவர்கள் சரித்திரத்தைப் பார்க்க வேண்டும். நம் நாட்டில் பல நூற்றாண்டுகள், அரசியலில் மிகவும் துர்ப்பலமான பல முஸ்லீம் ராஜ வம்சத்தவர் ஆட்சி புரிந்து வந்திருக்கின்றனர். இந்த நீண்ட காலத்திலும், சக்தி வாய்ந்த

ராஜாங்கம் இல்லாமலே நாடு சிதையாமல் அராஜகம் இன்றி வாழ்ந்து வந்திருக்கிறது. இதற்குக் காரணம் சமூகப் பிரிவுகள் பெரும்பாலும் தம் விவகாரங்களைத் தாமே நிர்வகித்துக் கொண்டதுதான். இதற்கு வரலாற்று நிபுணரும் அத்தாட்சி தருவர்.

*          *          *

சர்க்காரிடமே தொழில் நிர்வாக அதிகாரம் இருக்கும் சோஷலிஸ அமைப்பு நாட்டுக்கு நன்மை பயக்காது. தொழிலுற்பத்தி என்பது அதில் ஈடுபட்டோரின் சொந்த அக்கறையின்மீது நடக்க வேண்டுமா, அல்லது சர்க்காரின் நிர்ப்பந்தத்தின்மீது நடக்க வேண்டுமா என்பதே கேள்வி. சொந்த ஈடுபாட்டுடன் முதலீட்டாளர்கள் தொழில் செய்யும் போதுதான் திறமையாக, நம்பகமாக, உறுதியாக வேலை நடக்கிறது என்பது பிரத்தியட்சம். லாப நோக்கம், அதற்கு ஆதாரமான சொந்த ஈடுபாடு இவையே தொழில் வளம் பெருகுவதற்கு இயற்கை விதித்துள்ள விதி. இவ்வாறிருக்கத் தொழில் சுதந்திரத்தைக் குலைத்து, சர்க்காரின் சர்வாதிகாரத்தை ஏன் ஆதரிக்க வேண்டும்?

தொழிலில் ஏக போக்கியங்கள் உண்டாகாமல் தனியார் சுதந்திரமாகப் போட்டியிட்டு உற்பத்தி செய்யும்போதுதான் அரசாங்கக் கட்டுப்பாட்டின்கீழ் — அல்லது நேரடியாக அரசாங்க நிறுவனங்களாலேயே — உண்டாவதை விடச் சிறப்பான விளைவுகளைப் பெற முடிகிறது. கண்ட்ரோல்களும் உச்சவரம்புகளும் ஆள்கிற கட்சிக்குப் பணமும் வோட்டும் திரட்டித் தரலாம்; ஆனால் இவை மக்களின் பொருளாதாரத்தை உயர்த்தா. அவர்களைத் தார்மிக ரீதியிலும் உயர்த்தா. சுதந்திரமாக முதலீடு செய்து, உழைத்து, நியாயமான போட்டியில் முன்னேறி, சம்பாதித்து, சேமித்து, அதை மீண்டும் முதலீடு செய்வதற்கான வாய்ப்பே நாட்டின் தேவை. சோம்பியிருப்பதற்கு ஊக்கம் தருவதும், அரசாங்கத்தையே நம்பி வாழுமாறு செய்வதும் நாட்டின் தேவையல்ல. தொழிலூக்கம் உள்ளவர்கள் உற்பத்தி செய்வதற்குப் பூரண வாய்ப்பு அளிப்பதே அரசாங்கத்தின் பணி. பின்தங்கியவர்களின் இடர்ப்பாடுகளை அரசாங்கம் களைய வேண்டியதே. ஆனால் பின்தங்கியவர்களின் வோட்டுப் பலம் காரணமாக அவர்களின் கை ஓங்குமாறு செய்வதோ, உற்பத்திக்கும் சுபிட்சத்திற்கும் உதவுகின்ற பிறருக்கு அவர்கள் உபத்திரவம் தருவதை அநுமதிப்பதோ கூடாது.

சுமார் ஆறு மாதங்களுக்கு முன் உலகப் புகழ் கொண்ட பொருளாதாரப் பேராசிரியர் பார்கின்ஸன் தில்லியில் கூறியது நினைவில் கொள்ளத் தக்கது. அவர் சொன்னார்:

> குடியிருக்க வசதியான வீடு, போதுமான உணவு, நியாயமான சம்பளம், நம்பிக்கையுள்ள எதிர்காலம் இவற்றைத்தான் மக்கள் விரும்புகின்றனரே தவிர, சோஷலிஸபாணி சமுதாயத்தை அல்ல. மக்கள் விரும்பும் இத்தேவைகளை ஜப்பானில் நடப்பது போல் தனியாரின் சுதந்திரத் தொழில் மூலம் அளிக்கலாம். அல்லது சீனவில் நடப்பது போல் கம்யூனிஸத்தின் கீழ் அளிக்கலாம். ஆனால் பின்னால் சொன்ன வழியில் சுதந்திரம் பறி போகும். இந்தியாவில் நான் பார்த்ததிலிருந்து இங்கு சுபிட்ச சமூகத்தை அமைக்கக் கூடிய தொழிலூக்கமும் சக்தியும் திறமையும் இருப்பதாகவே தெரிகிறது. இந்தியத் தொழிலதிபர்களுக்கு மட்டும் சுதந்திரம் அநுமதிக்கப்பட்டால் அவர்களால் நாட்டுக்குச் சுபிட்சம் தேடித் தர முடியும். அவர்களை வரிக் கொடுமையிலிருந்தும், ஓயாத தலையீட்டிலிருந்தும் விடுவியுங்கள்; அவர்கள் நல்ல விளைவைச் செய்து காட்டுவார்கள். இதனிடையே அவர்கள் பணக்காரராயின் அதனாலென்ன? மக்களுக்கு இன்றைவிட உயர்வான சம்பளமும், வசதியான வீடும், உணவும், கல்வியும் கிடைக்குமாயின், அப்போது ஒருசிலர் பணக்காரராவதை யார் பொருட்படுத்தப் போகிறார்கள்? எல்லாவிடங்களிலுமே சாமானிய மக்களுக்கு சோஷலிஸம் என்றும் அலுத்து விட்டது. அவர்கள் பிரத்தியட்சமாகச் சுபிட்சம் என்ற பலனைப் பார்க்கவே விரும்புகின்றனர். (தற்போது இந்தியாவில் பின்பற்றப்படும்) 1894ம் வருஷத்திய பியாட்ரிஸ்—ஸிட்னி வெப் சோஷலிஸத்தால் பிரமாத விளைவு எதுவும் ஏற்படாது.

இந்த உலகில் எதற்குமே கூலி கொடுத்துத்தான் ஆக வேண்டும். நாட்டில் நல்ல

தொழில் நிர்வாகம் நடக்க வேண்டுமாயின் அதற்குக் கூலியாக முதலீட்டாளருக்கு லாபத்தைத் தந்தேயாக வேண்டும். தனித் தொழிலதிபர்களை அழிப்பதற்கு உத்தேசித்து, அது காரணமாக லாப நோக்கத்தையே ஒரு பாவச் செயலாக வருணிக்கக் கூடாது. தனியாருக்குப் பதில் சர்க்கார் தொழிலில் இறங்கினால் நஷ்டம்தான் விளைகிறது எனக் காண்கிறோம். எனவே வரி கொடுக்கும் மக்கள் அனைவரும் விஷயஞானம் பெற்று, லாப நோக்கம் செயல்பட்டுத் தனியார் தொழில் சிறப்பதையும் அதன் மூலம் தேசப் பொருளாதாரம் செழிப்பதையும் வரவேற்க வேண்டும். முகத்தின் மீது கோபித்துக் கொண்டு மூக்கை வெட்டிக் கொள்ளும் கொள்கை முறையானதல்ல.

(ராஜாஜி ''ஸ்வராஜ்யா''வில் எழுதியது.)

# ராஜாஜியின் கருத்துக்கள்

தமிழக நகரசபைத் தேர்தல் குறித்து, அக்டோபர் 26ந் தேதி கூடிய தமிழ்நாடு சுதந்திரக் கட்சி பார்லிமென்ட் குழு நிறைவேற்றிய தீர்மானம் வருமாறு:

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியும் புது காங்கிரஸும், இத்தேர்தல்களில் தி. மு.க. வுடன் கூட்டுச் சேர விரும்புவதாகத் தமிழக கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் கூறியிருக்கிறார். இது குறித்து, நவம்பர் 2, 3 தேதிகளில் சென்னையில் கூடும் தி. மு. க. செயற்குழு ஆலோசனை நடத்தும் — இவ்வாறு ஸ்ரீ வி சுப்பிரமணியம் விடுத்திருக்கும் பத்திரிகை அறிக்கையிலிருந்து அறிகிறோம். தி.மு.க.வானது புது காங்கிரஸுடன் கூட்டுச் சேருவதாகவோ, அல்லது அதன் ஸ்தலக் கிளைகள் தம் இஷ்டப்படி செய்யலாம் என்றோ முடிவு செய்யுமாயின் இதற்குச் சுதந்திரக் கட்சி ஆதரவு தர இயலாது. புது காங்கிரஸ் ஆதரிக்கும் வேட்பாளர்களைச் சுதந்திரக் கட்சி எதிர்க்கும்; சுதந்திரக் கட்சியின் வேட்பாளர் இருந்தால் அவரை ஆதரிக்கும்; தி. மு. க.வுக்கு எதிராக ஸ்தாபன காங்கிரஸ் நிறுத்தி வைக்கும் வேட்பாளரைச் சுதந்திரக் கட்சி ஆதரிக்கும்.

"இது நகரசபை சம்பந்தப்பட்ட விஷயம் தான். ஆயினும் அதிலுள்ள சுரோட்டான நிலை காரணமாக முக்கியத்துவம் பெறுகிறது. இருநூறுக்கும் மேற்பட்ட ஸ்தானங்களில் புது காங்கிரஸ் — தி.மு.க. கூட்டுக்கும் ஸ்தாபன காங்கிரஸுக்கும் இடையே தீவிரமான போட்டியிருக்குமெனத் தோன்றுகிறது. எனவே, சுதந்திரக் கட்சியினர் பின்பற்ற வேண்டிய வழியை அவர்களுக்குத் தெளிவாக்க வேண்டியதாகிறது. ஆகவே இத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

★

ஸ்ரீமதி இந்திரா காந்தியின் சர்க்கார் செய்யும் கம்யூனிஸச் சார்பான மடமைகளை நீக்குவதற்காக ஒரு ஜனநாயகக் கூட்டணி அமைக்கும் விஷயத்தில் போதுமான சுறுசுறுப்புக் காட்டப்படவில்லை. தத்தைகளின் மீது ஆரோகணித்துப் போரிட முடியாது. நல்ல ஆஸ்திரேலியப் புரவிகளின் மீதேறி எதிர்க் கட்சித் தலைவர்கள் போராட்டத்தைத் தொடங்க வேண்டும். சம்பந்தமற்ற விஷயங்களை நடுவே கொண்டுவந்து, கடவுள் அருளால் கிட்டும் வாய்ப்பினை இழந்துவிடக் கூடாது. 'ஜனநாயக எதிர்க்கட்சியினர் ஒன்று சேர்ந்து விட்டனர்; பாராளுமன்றத்தில் அவர்கள் ஒரே மகத்தான கோஷ்டியாக அமருகின்றனர்' என்ற செய்தியைப் படிக்கும் பெருமகிழ்ச்சி எனக்கு விரைவிலேயே கிட்டாதா என்றிருக்கிறது. இந்தச் சரியான தருணத்தில் வாய்ப்பை நழுவ விட்டால், நான் ஸ்ரீமதி இந்திராவைக் குறை கூறுவதைவிட அதிகமாகப் பழைய காங்கிரஸ் — ஜனசங்க—சுதந்திரா தலைவர்களையே குறைகூற வேண்டியதாகும். மூன்று இழைகளை முறுக்கிய கயிறு எளிதில் அறுபடாது என்று விவிலிய வேதம் கூறுகிறது. இப்போது ஜனநாயகத்தை இம் மூன்று கட்சிகளும் இழைந்த கயிற்றால் கட்டிக் காப்பதில் தோல்வி ஏற்படுமாயின் அதற்குக் காரணம் இக்கட்சிகள் ஒவ்வொன்றும் தன் முக்கியத்துவம் குறித்துக் கொண்டுள்ள தன்மதிப்பாகவே இருக்கும். தேசமே பூரணமாக விற்பனையாகிக் கொண்டிருக்கும் போது, கட்சிகள் தமது சுய முக்கியத்துவத்தைக் காப்பாற்றிக் கொள்ள முனைவது வியர்த்தமன்றோ?

★

ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு சிறிது வக்கரமாகியிருந்தால் சர்வாதிகாரி ஆகியிருப்பார் என்று அவரது சகோதரி ஸ்ரீமதி கிருஷ்ணா ஹதீஸிங் முன்பு ஓர் அமெரிக்கப் பத்திரிகையில் எழுதியிருந்தார். நல்ல வேளையாக ஸ்ரீ ஜவாஹர் அப்படி வக்கரித்துக் கொள்ளவில்லை. பார்லிமென்டரி ஆட்சி முறையின் சட்ட திட்டங்களைப் பின்பற்றிய பிரதமராகவே தொடர்ந்து இருந்து வந்தார். ஆனால், பரிதாபம்! அவரது மகள் வேறுவிதமாகப் படைக்கப்பட்டுள்ளார். அவரை வக்கரமாக்க வேண்டிய அவசியமின்றி, இயல்பாகவே, தொடக்கத்திலிருந்தே சர்வாதிகாரியாக இருந்து வருகிறார். ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவரிடை இம்மாறுபாடு நிகழ்வது எப்படி? 'ஓர் உயிரினத்தில் ஆணைவிடப் பெண் அதிகக் கொடுமையானது' என்று உயிரியல் பரிணாமக் கொள்கையின் அடிப்படையில் ருட்யார்ட் கிப்ளிங் ஒரு கவிதை எழுதியுள்ளார். இது உண்மையாக இருக்கலாம், அல்லாமலும் இருக்கலாம். ஆனால் ஸ்ரீமதி இந்திராகாந்தி சர்வாதிகாரியாகி வருவதாக இந்தியாவில் சகலருமே கருதுவது உண்மை.







மயிலை ஸ்ரீ தியாகராஜ ஸங்கீத வித்வத் ஸமாஜத்தில், சமீபத்தில் எமது தகப்பனார் ஸங்கீத வித்வான் பிரம்மஸ்ரீ வடக்கஞ்சேரி வீரராகவ அய்யர் அவர்களுக்கு நடந்த ஷஷ்டியப்த பூர்த்தி வைபவத்தில் நேரில் வந்திருந்து சிறப்பித்த பெரியவர்களுக்கும், நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும், வாழ்த்துச் செய்தி அனுப்பியவர்களுக்கும் எங்கள் நன்றி கலந்த வணக்கங்களை அன்புடன் தெரிவிக்கிறோம்.

**வி. வி. சுப்ரமணியம்**
வயலினிஸ்ட்
**மாஸ்டர் ரவி**



ஸ்ரீ N. G. ராஜகோபாலன், பூனா (Defence Audit) அவர்கள் குமாரத்தி சௌபாக்யவதி லீலாவுக்கும், சென்னை, சிரஞ்சீவி K. P. கோபாலகிருஷ்ணன் அவர்களுக்கும், சமீபத்தில் பம்பாயில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

**வாழ்க மணமக்கள்!**

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

முப்பத்துநான்காம் அத்தியாயம்

## இராவணனுக்கு ஆபத்து!

சுந்தரசோழர் தமது செல்வக் குமாரியைப் பார்த்து, "குந்தவை! நான் முதன் மந்திரியோடு இராஜ்ய காரியங்களைப் பற்றிக் கொஞ்சம் பேசவேண்டும். நீங்கள் போய் உங்கள் காரியங்களைப் பாருங்கள். போகும்போது **இதையும்** அழைத்துக் கொண்டு போங்கள்! உன் தாயார் மட்டும் இங்கே சிறிது நேரம் இருக்கட்டும்!" என்றார்.

சக்கரவர்த்தி "இதையும்" என்று குறிப்பிட்டது மந்தாகினியைத் தான். அப்படிக் குறிப்பிட்டதிலிருந்து அவள் விஷயத்தில் அவருடைய அருவருப்பு வெளியாயிற்று.

குந்தவை சிறிது ஏமாற்றத்துடன் தந்தையை நோக்கினாள். அதைக் கவனித்த சக்கரவர்த்தி, "ஆமாம்; இவள் முட்டிக் கொண்டது சிற்ப மண்டபத்திலுள்ள கைலாச மலைதானா என்பதைத் தெரிந்து கொள்வது நல்லது! இவளை அங்கேயே அழைத்துக் கொண்டுபோய்க் காட்டித் தெரிந்து கொள்ளுங்கள்! இவள் இங்கே நிற்பதை என்னால் சகிக்க முடியவில்லை!" என்றார்.

குந்தவை ஏமாற்றம் நிறைந்த முகத்தோடு மந்தாகினியைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு புறப்பட்டாள். அப்போது மலையமான் மகள் குந்தவையின் அருகில் வந்து, அவள் காதில் மட்டும் கேட்கும்படியாக, "குழந்தாய்! இவள் இப்போது பார்க்கச் சகிக்காமல்தானே இருக்கிறாள்? அப்பாவிடம் வருத்தப்படுவதில் என்ன பயன்? உன்னுடைய அலங்காரக் கலைத் திறமையையெல்லாம் இவளிடம் காட்டு, பார்க்கலாம்!" என்றாள்.

குந்தவை புன்னகை மூலம் தன் சம்மதியைத் தெரிவித்துவிட்டு அங்கிருந்து மந்தாகினியை அழைத்துச் சென்றாள். அவர்களுடன் வானதியும் பூங்குழலியும் வெளியேறினார்கள்.

பிறகு சுந்தர சோழர் முதன் மந்திரியையும் மலையமான் மகளையும் மாறி மாறிப் பார்த்த வண்ணம், "நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்து இந்தக் காரியத்தை எதற்காகச் செய்தீர்கள் என்று தெரியவில்லை. எனக்கு இதனால் சந்தோஷம் உண்டாகும் என்று நீங்கள் எண்ணியிருந்தால் அது பெருந் தவறு! முதன் மந்திரி! எதற்காக நீர் இவ்வளவு பிரயத்தனப்பட்டுக் கோடிக்கரையிலிருந்து இந்தக் காட்டுமிராண்டி ஜன்மத்தைப் பிடித்துக் கொண்டு வரச் செய்தீர்? இப்போதாவது உண்மையைச் சொல்லுங்கள்! இனிமேலாவது என்னிடம் எதையும் மறைத்து வைக்க முயல வேண்டாம்!" என்றார்.

அப்போது முதன் மந்திரி அநிருத்தர் உணர்ச்சி ததும்பக் கூறினார்:

"ஒரு தடவை செய்த பிழையை மறுபடியும் செய்ய மாட்டேன். இனி எந்தக் காரியத்தையும் தங்களிடமிருந்து மறைத்து வைக்கவும் உடன்படேன். உண்மை வெளிப்பட வேண்டுமென்பதற்காகவே இப்போது இவ்வளவு பிரயத்தனம் எடுத்துக் கொண்டேன். தங்களால் ஒரு பெண்மணி கடலில் விழுந்து இறந்ததாகத் தங்கள் மனம் வேதனைப் பட்டுக் கொண்டிருந்தது. அந்தச் சம்பவத்தைத் தாங்கள் மறந்து விட்டதாக வெகு காலம் நான் எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் நாளாக ஆக அந்த நினைவு தங்கள் உள்ளத்தின் உள்ளே பதிந்து வேதனையை அதிகப் படுத்திக் கொண்டிருந்ததாக அறிந்தேன். தூக்கத்தில் தாங்கள் அதைப் பற்றிய கனவு கண்டு பலமுறை ஓலமிட்டதாக மகாராணி சொன்னார்கள்.

அதனால் தங்களைக் காட்டிலும் மலைய மான் மகளார் அதிக வேதனை அடைந்தார்கள். சில காலத்துக்கு முன்பு என்னிடம் யோசனை கேட்டார்கள். அதன் பேரில் நாங்கள் இந்தப் பிரயத்தனம் செய்யத் தீர்மானித்தோம். தங்கள் காரணமாக இறந்து விட்டதாகத் தாங்கள் நினைத்து வருந்திய பெண்மணியைத் தங்கள் முன்னாலேயே கொண்டு வந்து நிறுத்தி அந்த எண்ணத்தைப் போக்க உத்தேசித்தோம். நேரில் கொண்டு வந்து நிறுத்தினால்தான் தாங்கள் நம்புவீர்கள் என்று எண்ணினோம். இது குற்றமாயிருந்தால் கருணை கூர்ந்து மன்னிக்க வேண்டும்!''



இதைக் கேட்ட சக்கரவர்த்தி ஆத்திரம் பொங்கக் கூறியதாவது:

''குற்றந்தான்! பெருங் குற்றம்! இத்தனை நாட்களும் இவள் பேயாக என்னைச் சுற்றிக் கொண்டிருந்தாள். கனவிலே வந்து கஷ்டப்படுத்திக் கொண்டிருந்தாள். பேய்க்குப் பதிலாகப் பிச்சியைக் கொண்டு வந்து என் முன்னால் நிறுத்தியிருக்கிறீர்கள். இது எனக்கு மகிழ்ச்சி தரும் என்று நினைத்தீர்களா? ஒரு நாளும் இல்லை. என்னிடம் முன்னதாக உண்மையைத் தெரிவித்திருந்தால் இவளை இங்கே அழைத்து வரும் யோசனையைக் கண்டிப்பாக நிராகரித்திருப்பேன். போனது போகட்டும். ஏதோ செய்தது செய்து விட்டீர்கள். வெகு கஷ்டப்பட்டு இங்கே இந்த ஊமைப் பைத்தியக்காரியை அழைத்து வந்து சேர்த்தீர்களே? திரும்பி அவளை எப்போது எப்படிப் போகச் செய்வதாக உத்தேசம்?'' இவ்வாறு சுந்தர சோழர் கேட்டதும், அநிருத்தர் உண்மையிலேயே பேச்சிழந்து நின்றார்.

அப்போது சக்கரவர்த்தினி ''சுவாமி! இங்கிருந்து என் சகோதரியைத் திரும்பிப் போகச் செய்வதாகவே எனக்கு உத்தேசமில்லை. இந்த அரண்மனையில் என்னுடனேயே அவர்



தங்கியிருப்பார். எனக்கு முன் பிறந்த தமக்கையைப் போல் பாவித்துஇவரை நான் போற்றிப் பூசித்து வருவேன்!'' என்றுள்.

''தேவி! என்னிடம் உனக்குள்ள பக்தியை இந்தமாதிரி மெய்ப்பிக்க நீ பிரயத்தனப்பட வேண்டியதில்லை. கண்ணகியைக் காட்டிலும் மேலான கற்பின் அரசி நீ என்பதை இந்த இருபத்தைந்து ஆண்டுகளில் நான் கண்டிருக்கிறேன். நான் நோய்ப்பட்டது முதல் நீ உன் செல்வக் குழந்தைகளையும் மறந்து, எனக்குப் பணிவிடைகள் செய்து வருவதையும் எனக்காக நோன்பு நோற்று வருவதையும் அறிந்துதான் இருக்கிறேன். காட்டிலே திரிந்த ஊமைப் பிச்சியை அரண்மனையிலே அழைத்து வைத்து என்னிடம் உனக்குள்ள பக்தியைக் காட்ட வேண்டியதில்லை. மலையமான் மகளே! இதைக் கேள்! முதன்

மந்திரி! நீங்களும் நன்ருகக் கேட்டுக் கொள்ளுங்கள். எப்போதோ ஒருகாலத்தில் மனித சஞ்சாரமற்ற தீவாந்தரத்தில் நான் தன்னந்தனியே தங்கியிருந்த போது இந்த ஊமைப் பிச்சியைப் பார்த்தேன். அச்சமயம் இவளிடத்தில் பிரியம் கொண்டதும் உண்மைதான். இல்லை என்று சொல்லவில்லை. அதனுலேயே இன்னமும் நான் இவளை நினைத்து ஏங்கித் தவிப்பதாக நீங்கள் எண்ணினுல் அதைவிடப் பெரிய தவறு செய்ய முடியாது. அப்போது இவள்பேரில் எனக்கு ஏற்பட்டிருந்த பிரியத்துக்கு எத்தனையோ காரணங்கள் இருந்தன. அந்தப் பிரியம் இந்த இருபத்தைந்து வருட காலத்தில் முற்றும் மாறித் துவேஷமாகவும் அருவருப்பாகவும் உருவெடுத்திருக்கிறது. கனவிலும் நினைவிலும் என்னை அவ்வளவாக இவள் கஷ்டப்படுத்தியிருக்கிருள். இவள் இந்த அரண்மனையில் இருக்கிருள் என்னும் எண்ணத்தையே என்னுல் சகிக்க முடியவில்லை. உடனே இவளை இங்கிருந்து அனுப்பிவிட்டு மறுகாரியம் பாருங்கள். இவளைப் பேய் என்று நினைத்தபடியால் இவள் பேரில் விளக்கை எடுத்து எறிந்தேன். உயிரோடும் உடம்போடும் இருப்பவள் என்று அறிந்திருந்தால் என்ன செய்திருப்பேனே, தெரியாது!''

இவ்வாறு சுந்தர சோழர் குரோதம் ததும்பிய குரலில் கூறிய குரூரமான வார்த்தைகளைக் கேட்டுச் சக்கரவர்த்தினியும் முதன் மந்திரியும் கதிகலங்கிப் போனுர்கள். சக்கரவர்த்தி இவ்விதம் பேசுவார் என்று அவர்கள் எதிர்பார்க்கவே யில்லை. அநிருத்தர் தாம் செய்த பழைய குற்றத்துக்காக மட்டுமே சக்கரவர்த்தி தம்மைக் கண்டனம் செய்வார் என்று கருதி யிருந்தார். மகாராணியோ சக்கரவர்த்தி வாய்விட்டு வெளிப்படையாகச் சொல்லாவிட்டாலும் மனத்துக்குள் மகிழ்ந்து பூரித்துத் தன்னுடைய பெருந்தன்மையான செயலை ரொம்பவும் பாராட்டுவார் என்று எதிர்பார்த்தாள்.

சுந்தர சோழரின் கொடிய வார்த்தைகள் அவர்களுக்கு ஏமாற்றமளித்ததோடு ஓரளவு வெறுப்பையும் கோபத்தையும் உண்டாக்கின.

சக்கரவர்த்தி இத்தனை நேரம் பேசியதற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல், ''சீச்சீ! இந்த ஊமைப் பைத்தியக்காரி உலகில் உயிரோடு வாழ்ந்திராவிட்டால் என்ன நஷ்டம் நேர்ந்துவிடும்? இவள் கடலில் விழுந்தபோது உண்மையாகவே செத்துத் தொலைந்து போயிருந்தால் எவ்வளவு நன்ருயிருந்திருக்கும்! எந்தப் பரம முட்டாள் மெனக்கெட்டு இவளை எடுத்துக் காப்பாற்றினன்?'' என்ருர்.

இதற்குப் பிறகு மலையமான் மகளால் பொறுக்க முடியாமற் போயிற்று.

உருக்கம் ததும்பிய ஆவேசத்துடன் அவள், ''சுவாமி! தங்கள் வாயால் அப்படிச் சொல்லாதீர்கள்! மகா பாவம். நன்றி மறத்தல் எவ்வளவு கொடிய பாதகம் என்று பெரியோர்கள் எத்தனையோ பேர் சொல்லி யிருக்கிருர்களே. தங்கள் உயிரை இந்த மாதரசி காப்பாற்றியதை வேணுமானுலும் மறந்து விடுங்கள். ஆனல் நம் அருமைக் குமாரன் அருள்மொழி வர்மனை இவர் காப்பாற்றியதை மறக்கலாமா? தாங்கள் மறந்தாலும் நான் மறக்க முடியாது. பதினுறு ஜன்மத்துக்கும் இந்தத் தெய்வ மகளுக்கு நான் நன்றிக் கடன் பட்டிருப்பேன்!'' என்று சொன்ஞள்.

''தேவி! அந்தக் கதையை மறுபடியுமா சொல்லுகிருய்?...'' என்று சுந்தர சோழர் மேலும் பேசுவதற்குள் மலையமான் மகள் குறுக்கிட்டுக் கூறினுள்:

''கதை அல்ல ஸ்வாமி! அருள்மொழியே என்னிடம் சொன்னுன். காவேரி வெள்ளத்தி லிருந்து தன்னைக் காப்பாற்றிய தேவியேதான் ஈழத் தீவிலும் பல முறை தன்னைக் காப்பாற்றியதாகச் சொன்னுன். நல்ல வேளையாக அவன் நாகைப்பட்டினத்துக்கு வந்து சுகமாக இருக்கிருன். அவனை அழைத்து வரச் செய்யுங்கள். தாங்களே நேரில் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்!''

''ஆமாம், ஆமாம்! அருள்மொழி நாகைப் பட்டினத்தில் இருக்கிருன். ஆனல் அவன் சுகமாக இருக்கிருன் என்பது என்ன நிச்சயம்? நேற்று அடித்த பெரும் புயலில் அவனுக்கு ஆபத்து நேர்ந்ததோ என்னமோ? முதன் மந்திரி! என் உள்ளத்தில் நிம்மதி இல்லை! இனம் தெரியாத அபாயம் ஏதோ என் குலத்தை நெருங்கிக்கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. இந்தச் சமயத்தில் இந்த ஊமைப் பிச்சி இங்கு வந்திருப்பதும் ஓர் அபசகுனமாகவே தோன்றுகிறது....''

''சுவாமி! கரையர் குல மகள் இங்கே இச்சமயம் வந்திருப்பது அபசகுனம் இல்லை; நல்ல சகுனம். இவர் இங்கிருப்பது நம்முடைய குலத்துக்கே ஒரு பாதுகாப்பு. நான் இடைவிடாமல் பிரார்த்தனை செய்யும் துர்க்கா பரமேசுவரியே என்மீது அருள் புரிந்து, இந்தத் தேவியை அனுப்பி வைத்திருக்கிருள்....''

''இல்லவே இல்லை. துர்க்கா பரமேசுவரி அனுப்பவில்லை. சனீசுவரன் அனுப்பி யிருக்கிருன். அந்தப் பிச்சியை

உடனே திரும்பப் போகச் சொல்லி விட்டு மறு காரியம் பாருங்கள். நீங்கள் முடியாது என்றால் நானே அந்தக் காரியத்தைச் செய்ய வேண்டியதுதான்...''

''சுவாமி! ரொம்பவும் கருணைகூர்ந்து எனக்கு இந்த வரத்தைக் கொடுங்கள். அருள்மொழி வந்து சேருகிறவரையில் அவர் இந்த அரண்மனையில் இருப்பதற்கு அனுமதி அளியுங்கள்!'' என்று சக்கரவர்த்தினி உருக்கமான குரலில் கேட்டுவிட்டுச் சுந்தர சோழரின் பாதங்களைத் தொட்டுப் பணிந்தாள்.

''முதன் மந்திரி! கேட்டீர்களா? வெளுத்ததெல்லாம் பால் என்று கருதும் மலையமான் மகளின் கோரிக்கையைக் கேட்டீரா? கடவுளே! இப்படியும் ஒரு கபடமற்ற சாது உலகத்தில் இருக்க முடியுமா? இவள் என்னிடம் எதுவுமே கோருவதில்லை. போயும் போயும் இப்படிப்பட்ட வரத்தைக் கேட்கிறாள். அதை மறுக்க மனம் வரவில்லை. ஆனால் அந்த ஊமைப் பைத்தியக்காரி இங்கே இருக்கும் ஒவ்வொரு நிமிஷமும் எனக்கு நரக வேதனையாக இருக்கும். ஆகையால், நாகையிலிருந்து இளவரசனை அழைத்து வர உடனே ஏற்பாடு செய்யுங்கள்!''

''அப்படியே செய்கிறேன், ஐயா! யானைப் படைகளும் குதிரைப் படைகளும் அனுப்பிப் பகிரங்கமாக இளவரசரை அழைத்து வரச் செய்யலாமா? அல்லது...''

''மாறு வேடம் பூணச் செய்து இரகசியமாக அழைத்து வரச் செய்யலாமா என்றுதானே கேட்கிறீர்? பகிரங்கமாக இளவரசன் வந்தால் சோழ நாட்டில் பெரும் குழப்பம் ஏற்படும் என்று எண்ணுகிறீர்கள் அல்லவா?''

''நான் எண்ணுவது மட்டும் அல்ல, பிரபு! நிச்சயமாக அறிந்திருக்கிறேன். மக்கள் பல காரணங்களால் கொதிப் படைந்திருக்கிறார்கள். ஏதாவது ஒரு வியாஜம் ஏற்பட வேண்டியதுதான்; உடனே மக்களின் உள்ளக் கொதிப்பு வெளியே பீறிட்டுக் கொண்டு வரும். பழுவேட்டரையர்களும் மதுராந்தகத் தேவரும் என்ன கதி அடைவார்கள் என்று சொல்ல முடியாது...''

''இது என்ன பேச்சு, முதன் மந்திரி! குடிமக்கள் அப்படி மூர்க்கத்தனமாக நடந்து கொண்டால் சோழ நாட்டு வீர சைனியங்கள் எங்கே போயின?''

''சைன்யங்களிடையேதான் அதிகம் கொதிப்பு பிரபு! மக்களாவது வெறுங் கூச்சல் குழப்பத்துடன் அடங்கிவிடுவார்கள். சேனை வீரர்களோ, தஞ்சைக் கோட்டையைச் சின்னா பின்னமாக்கி, பழுவேட்டரையர்களையும், மதுராந்தகத் தேவரையும் சிறையில் அடைத்து விட்டு ஈழங் கொண்ட வீராதி வீரராகிய அருள்மொழி வர்மரைச் சிங்காதனத்தில் ஏற்றிவிட்டே மறு காரியம் பார்ப்பார்கள்...''

''அப்படி நடக்க வேண்டுமென்று நீங்களும் மனத்துக்குள் ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். முட்டாள் ஜோதிடர்கள் கட்டி விட்ட கதைகளை நம்பிக் கொண்டு குடிமக்களும் புத்தி தடுமாறி அலைகிறார்கள். ஆனால் உங்கள் மனத்தில் ஒன்று நிச்சயமாகப் பதிய வைத்துக் கொள்ளுங்கள். என் பெரிய பாட்டனார் கண்டராதித்த அடிகளின் குமாரன் மதுராந்தகனே இந்தச் சோழ சிம்மாசனத்துக்கு உரிமை உடையவன். அவனுக்கே பட்டம் கட்டி வைப்பதென்று தீர்மானித்து விட்டேன். மக்கள் அதற்குத் தடை சொன்னாலும் சரி, தேவர்களும் மூவர்களும் வந்து தடுத்தாலும் சரி, நான் கேட்கப் போவதில்லை. என்னுடைய குமாரர்கள் அதற்குக் குறுக்கே நின்றால்....''

''சுவாமி! அப்படி ஒரு நாளும் நேராது. தங்கள் விருப்பத்துக்கு மாறாகத் தங்கள் குமாரர்கள் ஒரு நாளும் தடை சொல்ல மாட்டார்கள். அருள்மொழிக்கு இராஜ்ய ஆசையே கிடையாது. இலங்கை மணிமகுடத்தை அவனுக்குக் கொடுத்தார்கள். அதை அவன் வேண்டாம் என்று மறுதளித்து விட்டான். அப்படிப்பட்டவனா தங்கள் வார்த்தைக்கு மறு வார்த்தை கூறப் போகிறான்? கரிகாலன் மட்டும் என்ன? அவனுக்குத் தாங்களே பார்த்து யுவராஜ பட்டாபிஷேகம் செய்து வைத்தீர்கள். அதனால் ஒப்புக் கொண்டான். அவனுடைய வீர பராக்கிரமத்தைப் பற்றி நான் சொல்ல வேணுமா? அவன் ஆசைப்பட்டால் தானாகவே அவனுடைய வீர வாளின் உதவியைக் கொண்டு பெரிய இராஜ்யத்தை ஸ்தாபித்துக் கொள்ளக் கூடியவன் அல்லவா? ஆனால் அவனுக்கு இராஜ்யம் ஆளுகிற ஆசை இல்லை. தாங்கள் அவனிடம் தங்கள் விருப்பம் இன்னதென்பது பற்றி ஒரே ஒரு வார்த்தை சொல்ல வேண்டியதுதான்....''

''அந்த வார்த்தை நான் சொல்லி விடப் போகிறேனே, அவன் காதில் விழுந்து விடப் போகிறதே என்பதற்காகத்தானே எத்தனை சொல்லி அனுப்பியும் இங்கே வராமல் ஆட்டம் போடுகிறான்?''

''சக்கரவர்த்தி! பட்டத்து இளவரசர் காஞ்சியில் அற்புதமான பொன் மாளிகை நிர்மாணித்து விட்டுத் தங்களின் வருகைக்காகக் காத்திருக்கிறார்.''

"எதற்காகக் காத்திருக்கிறான் என்று எனக்குத் தெரியும். கம்ஸன் அவனுடைய பெற்றோர்களைச் சிறை வைத்தது போல் எங்களைச் சிறை வைத்துவிட்டுச் சோழ சிம்மாசனம் ஏறக் காத்திருக்கிறான். அவன் கட்டியிருப்பது பொன் மாளிகையோ, அல்லது அரக்கு மாளிகைதானோ, யாருக்குத் தெரியும்?"

"சுவாமி! கரிகாலனைப் பற்றித் தாங்கள் இவ்வாறு சொல்வது மிகக் கொடுமை" என்றாள் மலையமான் மகள்.

"சக்கரவர்த்தியின் உள்ளத்தை அவ்வளவு தூரம் விஷமாக்கி வைத்திருக்கிறார்கள்!" என்றார் முதன் மந்திரி.

"வேறு யாரும் இல்லை; என் மனத்தில் விஷம் ஏற்றியவன் கரிகாலனேதான். அவன் எனக்கு உண்மையான மகனாயிருந்தால் இத்தனை தடவை சொல்லி அனுப்பியும் ஏன் வரவில்லை?" என்று சுந்தரசோழர் கேட்டார்.

"அதற்கு வேறு சரியான காரணங்களும் இருக்கலாம் அல்லவா?"

"நீங்கள்தான் ஒரு காரணத்தை ஊகித்துச் சொல்லுவதுதானே?"

"கரிகாலன் கொள்ளிடத்துக்கு இப்பால் வந்தால் பழுவேட்டரையர்கள் அவனைச் சிறைப்படுத்தி விடுவார்கள் என்று நாடெல்லாம் பேச்சாயிருக்கிறது......"

"அம்மாதிரி சொல்லி என் மகளுடைய மனத்தை யாரோ கெடுத்திருக்கிறார்கள்! இவளுடைய தகப்பன் திருக்கோவலூர் மலையமான் ஒருவன்; கொடும்பாளூர் வேளான் ஒருவன். நீங்களும் அவர்களோடு சேர்ந்துகொண்டீர்களோ, என்னமோ தெரியவில்லை."

"சுவாமி! நான் யாரைப் பற்றியும் அவர்களுக்குப் பின்னால் பேசும் வழக்கமில்லை. சற்றுமுன் தாங்களே அபாயத்தைப் பற்றிப் பேசினீர்கள். தங்கள் உள்ளத்தில் அவ்விதம் தோன்றுவதாகச் சொன்னீர்கள். தங்கள் உள்ளத்தில் தோன்றுவது முற்றிலும் உண்மை. சோழர் குலத்துக்கு அபாயம் நெருங்கிக் கொண்டுதானிருக்கிறது. அது இரண்டு வழியாக வருகிறது. இந்த நாட்டில் இப்போது இரண்டு விதமான சதிகள் நடைபெற்று வருகின்றன. பழுவேட்டரையர்களும் சம்புவரையர்களும்......"

"முதன்மந்திரி அநிருத்தரே! நிறுத்துங்கள். பழுவூர் வம்சத்தார் நூறு ஆண்டு காலமாகச் சோழ குலத்துக்குத் தொண்டு செய்து வந்தவர்கள். பெரிய பழுவேட்டரையர் இருபத்துநாலு போர் முனைகளில் போரிட்டுத் தமது மேனியில் அறுபத்து நாலு புண்களைச் சுமந்து கொண்டிருக்கிறார். அப்படிப்பட்டவர் இன்று சோழகுலத்துக்கு எதிராகச் சதி செய்கிறார் என்று சொல்வதைக் காட்டிலும், சூரியன் இருட்டாகி விட்டது என்றும், கடல் நீரில் தீப்பிடித்துக் கொண்டு விட்டது என்றும் சொல்லுவதை நம்பலாம்...."

"சக்கரவர்த்தி! சூரியனையும் கிரகணம் பிடிக்கிறது. கடல் நீரில் வடவாமுகாக்கினி கொழுந்து விட்டெரிகிறது. ஆனால் அதைப் பற்றி நான் சொல்ல வரவில்லை. பழுவேட்டரையர்கள் சோழ குலத்துக்கு எதிராகச் சதி செய்வதாக நான் கூறவே இல்லை. மதுராந்தகருக்குப் பட்டம் கட்டுவதற்காக அவர்கள் மிகுந்த பிரயத்தனம் செய்து வருகிறார்கள்...."

"மகா சிவபக்தராகிய கண்டராதித்தருடைய புதல்வருக்குப் பட்டம் கட்ட எண்ணுவதில் என்ன தவறு? சிம்மாசன உரிமை நியாயமாக மதுராந்தகனுக்குத் தானே உரியது?" என்றார் சக்கரவர்த்தி.

"நானும் அதையேதான் சொல்லுகிறேன். மேலும் தாங்களே மனமுவந்து மதுராந்தகத் தேவருக்குச் சோழகுலத்து மணிமகுடத்தை அளிக்கத் தீர்மானித்து விட்டீர்கள். அப்படியிருக்கும்போது பழுவேட்டரையர்கள் மீது குற்றம் என்ன? தங்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கவே அவர்கள் பிரயத்தனப்படுகிறார்கள்....."

"ஆகையினால் என்னுடைய நன்றியறிதலுக்கு மேலும் அவர்கள் பாத்திரமாகியிருக்கிறார்கள்."

"ஆனால் சக்கரவர்த்தி, தங்களுடைய சம்மதம் பெறாத சில காரியங்களையும் செய்கிறார்கள். சோழ ராஜ்யத்தை இரண்டாகப் பங்கு போட்டுக் காவேரிக்குத் தெற்கேயுள்ளதை மதுராந்தகத் தேவருக்கும் வடக்கே உள்ள பகுதியைக் கரிகாலருக்கும் கொடுத்து விடுவதென்று யோசனை செய்து வருகிறார்கள். சம்புவரையர் மாளிகையில் இன்றைய தினம் அந்தப் பேச்சு நடந்து வருகிறது. சக்கரவர்த்தி! நூறு வருஷ காலமாகத் தங்கள் முன்னோர்கள் பாடுபட்டு வளர்த்த ராஜ்யத்தை, விஜயாலய சோழரும் ஆதித்த சோழரும் மகா பராந்தகச் சக்கரவர்த்தியும் ஈழம் முதல் கோதாவரிவரையில் நிலைநாட்டிய சோழ மகா ராஜ்யத்தை இரண்டாகப் பிளந்து பங்கு போடுவது தங்களுக்குச் சம்மதமா?"

"முதன் மந்திரி! ஒரு நாளும் அதற்கு நான் சம்மதம் கொடேன். சோழ இராஜ்யத்தைப் பிளப்பதற்கு முன்னால் என்னை வெட்டிப் பிளந்து விடுங்கள் என்று சொல்லுவேன். பழுவேட்டரையர் அத்தகைய முயற்சியில் இறங்கியிருப்பார் என்று நான் நம்பவில்லை. ஒருவேளை எனக்கு அது பிரியமாயிருக்கலாம், என்





மைசூர் ராஜ்ய சுதந்திரக் கட்சியின் மூன்றாவது மகாநாட்டைப் பெங்களூரில் சுதந்திரக் கட்சித் தலைவர் திரு மஸானி அக்டோபர் 18ந் தேதி தொடங்கி வைத்தார். லோபோ பிரபு இம்மகாநாட்டுக்குத் தலைமை வகித்துச் சிறப்பித்தார். இம்மகாநாட்டை யொட்டி அழகான மலரொன்றைத் தயாரித்து வெளியிட்டிருக்கிறார்கள். மலரின் ராஜாஜியின் நல்வாழ்த்தோடு ஜெனரல் கரியப்பா, திரு பிலுமோடி, ஸ்ரீ வி. பு. ஸ்ரீனிவாசன், டாக்டர் ஹாண்டே, ஸ்ரீ ரட்டா, பேராசிரியர் திரு எம். ரத்தினசாமி முதலியவர்களது கருத்துமிக்க கட்டுரைகள் அலங்கரிக்கின்றன.

படங்கள்: 1. பெங்களூர் சுதந்திரக் கட்சி மூன்றாவது மகாநாட்டில் தலைவர் லோபோ பிரபுவின் உரை. 2. சுதந்திரக் கட்சித் தலைவர் மஸானிக்கு மைசூர் ராஜ்ய சுதந்திரக் கட்சித் தலைவர் திரு [illegible] மாலையிட்டு மகிழ்கிறார். அருகே சுதந்திரக் கட்சிக் காரியதரிசி திரு வி. பு. ஸ்ரீனிவாசன்.

---

மகனுக்குப் பாதி இராஜ்யமாவது கொடுக்க நான் ஆசைப்படலாம் என்ற எண்ணத்தினால் அவர் இந்த யோசனைக்கு இணங்கியிருப்பார். அது எனக்கு விருப்பமில்லை யென்று தெரிந்தால் கைவிட்டு விடுவார். முதன் மந்திரி! இந்தச் சோழ சாம்ராஜ்யத்தில் ஓர் அங்குல விஸ்தீரணம்கூடக் குறையாமல் மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டி வைப்பேன். அதை என் மக்கள் எதிர்த்தாலும் சரி, பழுவேட்டரையரே எதிர்த்தாலும் சரி, நான் கேட்கப் போவதில்லை.''

'' சக்கரவர்த்தி! பழுவேட்டரையர் எதிர்த்தால் பொருட்படுத்த வேண்டியதில்லை. தங்கள் புதல்வர்களோ எதிர்க்கப் போவதில்லை. ஆனால் மதுராந்தகருக்குப் பட்டம் கட்டுவதற்குத் தடை இவையெல்லாம் அல்ல. அந்தத் தடை இன்னும் பெரிய இடத்திலிருந்து வருகிறது. தாங்களும் நானும் இந்தச் சோழ நாட்டு மக்கள் அனைவரும் போற்றி வணங்கும் தெய்வப் பெண்மணியிடமிருந்து அந்தத் தடை வருகிறது. சில நாளைக்கு முன்புகூட அவரிடம் பேசிப் பார்த்தேன்......''

'' செம்பியன் மாதேவியை நீங்கள் குறிப்பிடுகிறீர்கள். அந்த மாதரசியின் மனத்தையும் யாரோ கெடுத்திருக்கிறார்கள். நான் என் புதல்வர்களுக்குப் பட்டம் கட்ட ஆசைப்படுவதாகப் பெரிய பிராட்டி கருதி வருகிறார். முதன் மந்திரி! அவரை உடனே இங்கு அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்யுங்கள். நான் அவருடைய மனத்தை மாற்றி விடுகிறேன்....''

'' சக்கரவர்த்தி! அது அவ்வளவு சுலபம் அல்ல. மகான் கண்டராதித்தர் தமது தர்மபத்தினிக்கு அவ்விதம் கட்டளையிட்டுச் சென்றிருக்கிறார். அவருடைய மரணத்தறுவாயில் நான் அவர் அருகில் இருந்தேன். ' மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டக் கூடாது என்பதற்கு முக்கிய காரணம் இருக்கிறது; அது என் துணைவிக்குத் தெரியும்' என்று தங்கள் பெரிய பாட்டனார் சொன்னார்.''

'' முதன் மந்திரி! அப்படிப்பட்ட தடை உண்மையில் இருக்கிறதா? அது இன்னதென்று உங்களுக்குத் தெரியுமா?''

''தெரிந்திருந்தால், தாங்கள் கேட்கும் வரையில் காத்துக் கொண்டிருப்பேனா? பெரிய பிராட்டியை அழைத்து வரச் செய்து தாங்கள்தான் அதைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்.''

''ஆமாம்; அந்த ஒரு விஷயந்தான் எனக்கும் தொல்லை கொடுத்து வருகிறது. பெரிய பிராட்டியை உடனே அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்யுங்கள். எப்பேர்ப்பட்ட தடையாயிருந்தாலும் அதை நான் நிவர்த்தி செய்கிறேன். அவரை அழைத்து வருவதற்கு யாரை அனுப்பலாம்? ஏன்? என் குமாரியையே அனுப்புகிறேன். தேவி! குந்தவையை உடனே இங்கு அழைத்து வா!'' என்று சுந்தர சோழர் மலையமான் மகளைப் பார்த்துக் கூறினார்.

சக்கரவர்த்திக்கும் முதன் மந்திரிக்கும் நடந்த சம்பாஷணையை வானமா தேவி ஒரு காதினால் கேட்டுக் கொண்

டிருந்தாலும், அவனுடைய கவனமெல்லாம் சற்று முன் அங்கிருந்து சென்ற ஊமை ராணியின்பேரிலேயே இருந்தது. ஆதலின் சக்கரவர்த்தி குந்தவையை அழைத்து வரும்படி சொன்னதும் மலையமான் மகள் அங்கிருந்து அந்தப்புரத்துக்கு விரைந்து சென்றாள்.

அவள் அந்தப்புரத்தை அடைந்தபோது குந்தவை, வானதி, பூங்குழலி ஆகியவர்கள் பெருங் கலக்கத்தில் ஆழ்ந்திருந்தார்கள். அதற்குக் காரணத்தையும் மகாராணி உடனே தெரிந்து கொண்டாள். ஊமை ராணியை அங்கே காணவில்லை. எங்கே என்று கவலையுடன் கேட்டபோது குந்தவை கூறியதாவது : ''அம்மா! தங்கள் கட்டளையை நிறைவேற்றுவது சுலபமான காரியமாக இல்லை. ஆயினும் நாங்கள் மூன்று பேருமாகச் சேர்ந்து வற்புறுத்தி மந்தாகினி தேவியைக் குளிப்பாட்டினோம். பிறகு புதிய ஆடைகள் அணிவித்தோம். வானதி அவருடைய கூந்தலை வாரி முடிந்து கொண்டிருந்தாள். பூங்குழலி பூத்தொடுத்துக் கொண்டிருந்தாள். ஆபரணங்கள் எடுத்து வருவதற்காக நான் அடுத்த அறைக்குப் போனேன். ஆபரணங்கள் எடுத்துக் கொண்டிருந்தபோதே இவளுடைய கூச்சல் கேட்டது. திரும்பி வந்து பார்த்தால் மந்தாகினி தேவியைக் காணவில்லை. கூந்தலை வாரி முடிபோட்டவுடனே திடீரென்று அவர் திமிறிக் கொண்டு ஓடிப் போனாராம். அக்கம் பக்கத்து அறைகளில் எங்கேயும் காணவில்லை. இன்னமும் தேடிக் கொண்டிருக்கிறோம்!''

இதைக் கேட்டு மலையமான் மகள் புன்னகை புரிந்தாள். ''அவருக்கு அலங்காரம் செய்தபோது எதிரில் கண்ணாடி இருந்ததா?'' என்று கேட்டாள்.

''இருந்தது ; சற்றுத் தூரத்தில் இருந்தது'' என்றாள் வானதி.

''அவருடைய அலங்கரித்த உருவத்தைத் தற்செயலாகக் கண்ணாடியில் பார்த்திருப்பார். அது அவருக்கு வெட்கத்தை உண்டாக்கியிருக்கும். அதனால் ஓடி எங்கேயாவது மறைந்து கொண்டிருப்பார். இன்னும் நன்றாகத் தேடிப் பாருங்கள். ஒரு வேளை அந்தப்புரத்துப் பூங்காவுக்குச் சென்று ஒளிந்து கொண்டிருந்தாலும் இருப்பார். மதிள் ஏறிக் குதிப்பது, பலகணி வழியாகக் குதிப்பது போன்ற காரியங்கள்தாம் அவருக்கு வழக்கமானவை ஆயிற்றே?'' என்றாள் சக்கரவர்த்தினி.

**பி**றகு எல்லாருமாக நந்தவனத்துக்குச் சென்று தேடினார்கள். அங்கும் ஊமை ராணி அகப்படவில்லை. அவர்களுடைய கவலை அதிகமாயிற்று. முதன் மந்திரியிடமும் சக்கரவர்த்தியிடமும் போய்த் தெரிவிக்கலாமா என்று அவர்கள் எண்ணத் தொடங்கியபோது எங்கிருந்தோ 'டணர்' 'டணர்' என்று ஒரு சத்தம் வந்தது. கருங்கல்லில் இரும்பு உளியினால் ஓங்கி அடிப்பது போன்ற ஓசை அது. எங்கிருந்து அந்த ஓசை வருகிறது என்று காது கொடுத்துக் கவனமாகக் கேட்டார்கள். சிற்ப மண்டபத்திலிருந்து வருகிறது என்று தெரிந்தது. உடனே ஒரு தாதிப் பெண்ணைத் தீபம் எடுத்துக் கொண்டு வரும்படி சொல்லிவிட்டு எல்லாரும் சிற்ப மண்டபத்துக்குச் சென்றார்கள். சிற்ப மண்டபத்துக்குள்ளே அவர்கள் ஒரு விந்தையான காட்சியைக் கண்டார்கள். ஓரளவு ஆடை அலங்காரங்கள் அணிந்து விளங்கிய மந்தாகினி கையில் ஒரு நீண்ட பிடியுள்ள சுத்தியை வைத்துக் கொண்டு கைலாச மலையைத் தாங்கிக் கொண்டிருந்த இராவணேசுவரனுடைய கரங்களை ஓங்கி ஓங்கி அடித்துக் கொண்டிருந்தாள். மிக உறுதியான கல்லினால் செய்யப்பட்ட சிற்பமாதலால் அந்தத் தாக்குதலுக்கு இராவணன் அதுவரையில் அசைந்து கொடுக்கவில்லை. ஆனாலும் சீக்கிரத்தில் அவனுக்கு ஆபத்து வந்துவிடலாம் என்ற நிலைமை ஏற்பட்டிருந்தது. கைலாச மலையைத் தாங்கிக் கொண்டிருந்த இராவணனுடைய கரங்களில் இரண்டு மூன்று கைகள் ஒடிந்து விட்டால் மலையே இடம் பெயர்ந்து அவன் தலைகளின் மீது இன்னும் நன்றாக உட்கார்ந்துவிடக் கூடும். தலைகள் சுக்கு நூறாக நொறுங்கிவிடக் கூடும்! அத்தகைய ஆபத்தான நெருக்கடியிலேதான் குந்தவை முதலியவர்கள் சிற்ப மண்டபத்துக்குள் பிரவேசித்தார்கள்.

அவர்களுடைய வரவைப் பார்த்ததும் மந்தாகினி தன்னுடைய கையில் பிடித்திருந்த சுத்தியைக் கீழே போட்டுவிட்டு வந்தவர்களைப் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டு நின்றாள்.

மண்டபத்துக்குள் பிரவேசித்தவர்களில் பூங்குழலியைத் தவிர மற்றவர்களின் உள்ளங்களில் ''இவள் ஒரு பைத்தியக்காரப் பிச்சிதான்! சக்கரவர்த்தி இவளைக் கண்டு அருவருப்பு அடைவதில் வியப்பு ஒன்றுமில்லை!'' என்ற எண்ணம் தோன்றியது.

மலையமான் மகள் மற்றவர்களைப் பார்த்து, ''பெண்களே! இதைப் பற்றிச் சக்கரவர்த்தியின் முன்னிலையில் யாரும் பிரஸ்தாபிக்க வேண்டாம்!'' என்று எச்சரிக்கை செய்தாள். (தொடரும்)

# வெள்ளி விழா
## அமைதியின் வெற்றி விழா!

'ஐக்கிய நாடுகள் சபை' எனப் பொருள்படும் ஸ்தாபனத்துக்கு 'யுனைடெட் நேஷன்ஸ்' எனப் பெயரிட்டவர் யார் தெரியுமா? அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட்தான் முதன் முதலாக அந்தப் பெயரைக் குறிப்பிட்டார். இரண்டாம் உலகப் போரில் அச்சு நாடுகளுக்கு எதிராக ஒன்றுபட்டிருந்த தேச நாடுகளை, ஆரம்ப உறுப்பினர்களாகக் கொண்டு, இந்த உலகப் பேரவையை நிறுவத் திட்டமிட்டதால் ஐக்கிய நாடுகள் என்ற பெயரே ஏற்றதெனக் குறிப்பிட்டார், ரூஸ்வெல்ட். அச்சு நாடுகளுக்கு எதிராகப் போரில் ஈடுபட்டிருந்த இருபத்தாறு நாடுகளின் பிரதிநிதிகள், 1942, ஜனவரி முதல் தேதியில் வெளியிட்ட ஒரு பிரகடனத்தில் 'ஐக்கிய நாடுகளாகிய நாங்கள்' என்ற தொடரை முதன் முதலாக உபயோகித்தார்கள். 1945ல் சான் பிரான்ஸிஸ்கோவில் கூடிய ஐம்பது நாடுகளின் பிரதிநிதிகள், 'ஐக்கிய நாடுகள்' என்ற பெயரை ஏற்றுக் கொண்டார்கள்.

□ நியூயார்க் நகரில் உள்ள ஐ. நா. சபைக் கட்டடத்தின் உயரம் 505 அடி! 39 மாடிகளைக் கொண்ட இக்கட்டடத்தின் முகப்பில் மட்டும் 5400 பச்சை வண்ண ஜன்னல்கள் பொருத்தப்பட்டுள்ளன. இந்த உலகப் பேரவையினைக் கட்டுவதற்கு, 8,500,000 டாலர் மதிப்புள்ள நிலத்தை இலவசமாக வழங்கினார் ஜான் ராக்பெல்லர். கட்டடம் கட்டுவதற்காக, வட்டியில்லாக் கடனாக 65,000,000 டாலர்களை அமெரிக்க அரசு தந்தது. 1949, அக்டோபர் 24ல் ஐ.நா.வின் அடித்தளக் கல் நாட்டப்பட்டது. 1951ல் பிரதானக் கட்டடங்கள் பூர்த்தியாகிப் பொலிவு பெற்றன.

□ 1970ஆம் ஆண்டுக்கான ஐ. நா.வின் பட்ஜெட் 199.7 மில்லியன் டாலர்கள். இதில் அமெரிக்காவின் பங்கு முப்பது சதவீதத்துக்கு மேல். ருஷியா பதினைந்து சத வீதம், பிரிட்டன் ஏழு சதவீதம், பிரான்ஸ் ஆறு சதவீதம், கனடா 3.25 சதவீதம், இந்தியா 1.85 சதவீதம். இவ்விதம், ஐ.நா.வுக்கு நிதி வழங்குவதில் இந்தியா (சென்ற ஆண்டுக் கணக்குப்படி) ஆறாம் இடத்தை வகிக்கிறது. ஐ. நா.வின் மொத்தச் செலவுகளில் ஒரு சத வீதத்துக்கு மேல் வழங்குவன பதின்மூன்று நாடுகள்தாம்! எண்பது சிறு நாடுகள் சேர்ந்து வழங்கும் தொகை, ஐ. நா.வின் மொத்த பட்ஜெட்டில் சுமார் ஐந்து சதவீதம்தானாம்!

□ ஐ. நா.வின் பொதுப் பேரவையில் இதுவரை 126 நாடுகள் அங்கம் பெற்றுள்ளன.

பொதுப் பேரவைக்கு ஒவ்வோர் உறுப்பு நாடும் ஐந்து பிரதிநிதிகளை அனுப்பலாம். ஆனால் ஒரு வோட்டுதான் உண்டு. பொதுப் பேரவை சாதாரணமாக ஆண்டுக்கொரு முறை கூடும். அவசரம் நேர்ந்தால் விசேஷமாகக் கூடுவதும் உண்டு.

ஐ. நா.வின் செயற்குழுவாக இருப்பது பாதுகாப்புக் கவுன்சில். இது எப்போதும் இயங்கிக் கொண்டிருக்கும். இதில் ஐந்து நாடுகள் நிரந்தர உறுப்பினராகவும், பதினொரு நாடுகள் தாற்காலிக உறுப்பினராக (ஈராண்டுக்கு)வும் இடம் பெற்றுள்ளன. நிரந்தர உறுப்பு நாடுகளுக்கு மட்டும், 'வீட்டோ' எனப்படும் தடுப்புரிமை உண்டு. இந்தத் தடுப்புரிமையை இதுவரை நூறு தடவைகளுக்கு மேல் உபயோகப்படுத்திய பெருமை ருஷியாவையே சேரும். இதர நாடுகளில் பிரான்ஸ் நான்கு தடவையும், பிரிட்டன் இரு முறையும், தேசிய சீனா ஒரு தடவையும், அமெரிக்கா ஒரு தடவையும் உபயோகித்துள்ளன. எகிப்து விவகாரத்தில் பிரிட்டன் முதன் முதலில் 'வீட்டோ'வை உபயோகித்தது. தென் ரொடீசிய விவகாரத்தில், அமெரிக்கா முதன் முதல் (1970) வீட்டோவை உபயோகித்தது.

□ ஐ.நா.வில் அங்கம் பெறாத நாடுகள் : செஞ்சீனம், சுவிட்சர்லாந்து, கிழக்கு ஜெர்மனி, வடகொரியா, தென்கொரியா, வியட்நாம்.

எந்தத் தரப்பிலும் சாராத தனது நடுநிலைமையைப் பேணுவதற்காகச் சுவிட்சர்லாந்து ஐ. நா.வில் சேரவில்லை.

ஆனால் செஞ்சீனத்தின் கதை வேறு. ஆக்கிரமிப்பு நாட்டமே கொண்ட செஞ்சீனா போன்ற நாடுகளுக்கு ஐ. நா.வில் இதுவரை இடம் கிடைக்கவில்லை.

ஐ. நா.வில் சேர்ந்த நாடுகளில் இடையில் விலகிக் கொண்ட ஒரே நாடு இந்தோனீசியா. மலேசியாவைப் பாதுகாப்புக் கவுன்சிலில் தாற்காலிக உறுப்பினராகச் சேர்த்ததை எதிர்த்து 1965ல் இந்தோனீசியா ஐ.நா.விலிருந்து விலகிக் கொண்டது. ஆனால் 1966ல் மறுபடியும் சேர்ந்துகொண்டது.

— க. குழந்தைநாதன்



# ராமாயணம்




இப்படி யெல்லாம் மிகக் குரூரப் பேச்சுக்களைக் கேட்டும், பயங்கர சொரூபங்களைப் பார்த்தும், சீதை, "ஓ!" என்று வாய்விட்டு அழுதாள். எவ்வளவு தைரியமாக இருந்தாலும் இயற்கை வேகத்தை வழியடைப்பது கஷ்டம். ஆனபடியால் குழந்தை போல் அழுதாள். அழுதபோதிலும், சித்தம் கலங்காமல் ராமனைத் தியானித்துக் கொண்டேயிருந்தாள்.

"பதினாலாயிரம் ராக்ஷசர்களை ஜனஸ்தானத்தில் நிர்மூலம் செய்த என் ராமன் ஏன் என்னை மீட்டுக் கொண்டு போக இன்னும் வரவில்லை? தண்டகாரண்யத்தில் விராதனை வதம் செய்த வீரர்கள் ஏன் என்னைப் பற்றி இன்னும் சும்மா இருக்கிறார்கள்? நான் இவ்விடம் இருப்பது அவர்களுக்கு இன்னும் தெரியவில்லை என்றே எண்ணுகிறேன். தெரிந்திருந்தால் சும்மா இருப்பார்களா?

"கழுகரசன் ஜடாயுவும் அரக்கனால் கொல்லப்பட்டான். அவன் உயிர் வைத்திருந்தால் விஷயத்தைச் சொல்லியிருப்பான். ஆனால் என்னை அரக்கன் தூக்கிப் போவதைப் பார்த்துப் பொறுக்க முடியாமல் கோர யுத்தம் செய்து அவன் உயிர் நீத்து விட்டான். ராமனுக்கு நான் இருக்குமிடம் இன்னும் தெரியவில்லையென்றே எண்ணுகிறேன்.

"ஆனால் தெரியாமலா போகப் போகிறது? இந்த லங்கையும் ராக்ஷசர்களும் அழியாமலா போகப் போகிறார்கள்? கட்டாயம் இந்த நகரத்தில் ஒவ்வொரு வீட்டிலும் அரக்க குலத்துப் பெண்கள் விதவைகளாகி அழுது புரண்டு அலையப் போகிறார்கள். இந்த நகரமும் ராவணனும் அரக்கர் குலமும் அழிந்து போவது நிச்சயம்."

இவ்வாறு தனக்குள் யோசித்துக் கொண்டிருந்தாள். யோசித்துத் தைரியம் அடைந்தாள். மறுபடியும் வேறு ஊகங்களை ஊகித்துத் துக்கத்தில் மூழ்கினாள்.

"என்னை இழந்த துக்கத்தினால் ஒருவேளை இராமன் உயிரை விட்டுவிட்டானோ? அப்படியே நடந்திருக்கலாம்.

இல்லாவிட்டால் இப்படி என்னை விட்டு விட்டு இவ்வளவு நாட்கள் சும்மா இருந்திருக்க முடியாதே! ஆஹா! அவனல்லவோ பாக்கியவான். தேவர்களோடு சேர்ந்து விட்டான். நானல்லவோ பாவம் செய்தவள். இந்த நிலையில் இருக்கிறேன். என் இதயம் கல்லாகவே இருக்க வேண்



டும். இவ்வளவு நேர்ந்தும் உயிருடன் இருக்கிறேனே!''

மறுபடியும் வேறு பயம் தோன்றிற்று. ''ஒருவேளை தவம் செய்தே ஆயுளைக் கழிக்கத் தீர்மானித்துவிட்டு என்னைப் பற்றிய எண்ணத்தை விட்டுவிட்டார்களோ? இல்லை, இல்லை! அப்படி ஒரு நாளும் செய்ய மாட்டார்கள். வீரன் தன் கடமையை விட்டுவிட்டுச் சந்நியாச வாழ்க்கையில் புகுவானா? இதை நான் எண்ணியது அறியாமை. நான் இருக்குமிடம் அவர்களுக்குத் தெரியவில்லை யென்பதே காரணம்.

''ஒருவேளை என்மேல் ராமனுக்கு இருந்த அன்பு ஓய்ந்து போய்விட்டதோ? உருவம் மறைந்தால் அன்பும் மறையும் என்கிறார்களே, ஒருவேளை அப்படியிருக்குமோ? மறைந்தது மறந்தும் போகும் என்கிறார்கள் அல்லவா?

''சீ, சீ, இந்த எண்ணம் பாபமாகும். என் ராமன் என்னை மறப்பானா? ஒரு நாளும் இல்லை. என்னை ராமன் மறந்துவிடும்படியான குற்றம் நான் ஏதும் செய்ததில்லையே! அதுவல்ல காரணம். ஒரு வேளை ராவணன் ஏதோ திருட்டும் மோசமும் செய்து வஞ்சித்து ராஜகுமாரர்களைக் கொன்று விட்டானோ?''

இவ்வாறு மாறி மாறிப் பல யோசனைகள் செய்து கொண்டு துயரக் கடலில் மூழ்கினாள். உயிரை விடுவதே நலம் என்கிற முடிவுக்கு வந்தாள். சிம்சுபா மரத்துக் கிளை ஒன்றில் தன்



## மலர்களைச் சாறு பிழிந்தார்!

இளமைப் பருவத்திலேயே கவிதை எழுத மூற்பட்டு விட்டான் அந்தப் பையன்.

பேனாவைச் சாதாரண மைக்கூட்டில் தோய்த்து எழுத விரும்பாமல், ஒரு நாள் — நறுமண மலர்களை யெல்லாம் பறித்து, மர இயந்திரத்தில் போட்டுத் திருகி, சாறு பிழிந்தெடுத்துக் கொண்டான். அதை மைக்கூட்டில் நிரப்பி, பேனாவைத் தோய்த்துக் கவிதை எழுத, பெரிதும் ஆசைப்பட்டு இப்படி செய்தான்!

அன்று மலர்ச் சாறுகளைப் பிழிந்து எழுத ஆசைப் பட்டவரின் கவிதைகளில், என்றுமே இலக்கிய மணம் வீசிக் கொண்டிருக்கும்.

யார் இவர்? இலக்கியத்துக்காக நோபல் பரிசு வாங்கிவிட்ட மகாகவி **ரவீந்திரநாத டாகூர்தான்!**

ஆதாரம்: கி. வா. ஜ. எழுதிய 'வளரும் பயிர்'
தகவல்: ஏ. சுவாமிநாதன்

---

தலைமயிரைக் கொண்டு சுருக்குப் போட்டுக் கொண்டு துக்கத்திலிருந்து விடுதலை பெறலாம் என்று எண்ணினாள்.

அரக்கிகள் சீதையைத் தங்கள் எண்ணத்துக்குத் திருப்ப முடியவில்லையே என்று இன்னது செய்வது என்பது தெரியாமல் இருந்தார்கள். அவர்களில் சிலர் காரியம் முடியவில்லை என்று ராவணனுக்குச் செய்தி சொல்லப் போனார்கள். சிலர் அங்கேயே நின்றார்கள். சீதையைப் பயமுறுத்திக் கொண்டிருந்தார்கள்.

அவர்களிடையில் திரிஜடை என்கிற ராக்ஷஸி அவர்களைக் கண்டித்து, "மூர்க்கிகளே, என்ன உளறுகிறீர்கள்! நான் கண்ட கனவைக் கேளுங்கள். இந்த லங்கை அழிந்து போகும் காலம் நெருங்கிற்று" என்றாள்.

பிறகு தான் கண்ட கோர சொப்பனத்தை விவரித்துச் சொன்னாள்:

"சீதையை அழைத்துப் போக ராமன் சூரியனைப் போல் திவ்வியப் பிரகாசம் வீசிக் கொண்டு லங்கைக்கு வந்து விட்டதாகக் கனவு கண்டேன். ராவணன் அழிந்து யமனுடைய வீட்டுக்குப் போனதைக் கண்டேன்.

"சீதையை எடுத்து யானையின் மேல் ஏற்றிக் கொண்டு ராமன் சென்று விட்டதைக் கண்டேன். ராவணனும் ராக்ஷஸ சமூகம் முழுதும் அவலக்ஷண வஸ்திரங்கள் உடுத்திக் கொண்டு அவலக்ஷண நிலையில் யமனால் இழுத்துப் போகப்படுவதைக் கண்டேன்."

இப்படித் திரிஜடை ராக்ஷஸிகளுக்குத் தான் கண்ட கெட்ட கனவைச் சொல்லி, "இந்தப் புண்ணியவதியை இம்சிக்காதீர்கள். அழிந்து போவோம். இவளுடைய அருளைக் கேட்டுப் பெறுங்கள்" என்று போதித்தாள்.

இப்படித் திரிஜடை சொல்லிக் கொண்டிருந்த சமயத்தில் உயிரை மாய்த்துக் கொள்ளுவதென்று நிச்சயித்த சீதைக்குப் பல நற்சகுனங்கள் திடீரென்று உண்டாயின. கண்களும் கைகால்களும் மங்களகரமாகத் துடித்தன. மனத்தில் எதிர்பாராத தைரியமும் தானாக உண்டாயிற்று. உயிரை நீக்கும் யோசனை மறைந்து போயிற்று.

* * *

வனத்தில் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் மேலே மறைந்திருந்து பார்த்துக் கொண்டிருந்த ஹனுமான், இனி என்ன செய்யலாம் என்று யோசித்தான்.

லங்கைக்கு வந்து அங்கே சீதையைக் கண்டபின் வேறு என்ன இருக்கிறது என்று வாசகர்கள் எண்ணலாம். ஆனால் காரியம் அவ்வளவு எளிதாக இல்லை. ஹனுமான் யோசித்த விஷயங்களைக் கேளுங்கள்.

"மற்றவர்கள் செய்ய முடியாத காரியத்தைச் செய்து விட்டேன். கடலைத் தாண்டி சீதை இருக்கும் இடம் கண்டாயிற்று. ராக்ஷசர்களுடைய நகரம், அதன் காப்பு முதலிய எல்லா விஷயங்களையும் பார்த்து அறிந்து கொண்டேன். பகைவனுக்குத் தெரியாமல் தூதனாகிய நான் செய்ய வேண்டியது செய்தாயிற்று. ஆனால் நிலைமை அபாயமாக இருக்கிறது. கண்ட விஷயங்களை ராமனிடமும் அரசனிடமும் சொல்ல நான் இப்போது திரும்பிப் போய் விட்டேனானால் இங்கே நடக்கும் சம்பவங்கள் என்ன? ராம லக்ஷ்மணர்களும் வானர சேனையும் இவ்விடம் வருவதற்குள் சீதை துக்கத்தைப் பொறுக்க முடியாமல் உயிரை விடுவாள். அப்போது எல்லாக் காரியமும் அழிந்ததாகவே ஆகும். சீதையைக் கண்டது மட்டிலும் போதாது. அவளுக்கு ஆறுதல் மொழிகள் சொல்லி, ராமனுடைய செய்தியை அவளுக்குச் சொல்லித் தைரியப்படுத்தி விட்டே செல்ல வேண்டும். சீதையிடம் பேசாமல் திரும்பினால் ராமனுக்கு என்ன திருப்தி யாகும்? ஆனபடியால் எப்படியாவது வழி தேடிச் சீதையுடன் பேசியே தீர வேண்டும்."

ஆஞ்சநேய ஸ்தோத்திர மாலையில் 'புத்திமதாம் வரிஷ்டம்' என்று ஒரு பெயர் வரும். அதாவது 'புத்திமான்களில் சிறந்தவன்' என்று. அது உண்மைதானே?

(தொடரும்)



# பின்னியின்

தனிச்சிறப்புள்ள பாலி-யேன் ஃபினிஷ் கொண்ட

# கிரிஸ்டல் லஸ்டலின் கரோலின்

## நெடுநாள் உழைப்பவை ...மிருதுவானவை

உயர்தரமான இந்த பின்னி பாப்ளின் ஷர்ட்டிங்குகளில் உங்களுக்குத் தேவையானவற்றை தேர்ந்தெடுங்கள். ஒவ்வொரு துணியும் பாலி-யென் ஃபினிஷ் செய்யப்பட்டது. அதன் அனுகூலம் துணிக்கு அதிகப் பாதுகாப்பு, மேலும் பார்வைக்கு பளபளப்பு.

மறுபடி நினைவூட்டுகிறோம்! கிரிஸ்டல், லஸ்டலின், கரோலின் — உயர்தரமான பின்னி பாப்ளின்கள்.

**பின்னி**

BY/5921




அவள் சற்று முன்புதான் இருமலால் திணறிக் கொண்டிருந்தாள்... பிறகு க்ளைகோடின் சாப்பிட்டாள். இப்பொழுது அவளைப் பாருங்கள்! சோர்வைத்தரும் இருமலிலிருந்து விடுபட்டு எவ்வளவு நிம்மதியாகத் தூங்குகிறாள்!

**பூரண இருமல் கட்டுப்பாட்டுக்கு க்ளைகோடினுக்கு இணை எதுவுமில்லை!**

இருமலிலிருந்து பூரணமாக நிவாரணம் தர மருத்துவரீதியாக அங்கீகரிக்கப்பட்ட க்ளைகோடின் ஃபார்முலா செயல்புரிவது இப்படித்தான்:



- **மூளையில்** — இருமல் கேந்திரத்தைக் கட்டுப்படுத்துகிறது.
- **தொண்டையில்** — சளி அடைப்பை அகற்றி எரிச்சலைச் சமனப்படுத்துகிறது.
- **மார்பில்** — இறுகிய தசைநார்களுக்கு இதமளித்து சுலபமாக சுவாசிக்க உதவுகிறது.
- **நுரையீரல்களில்** — அடைத்துக் கொண்டிருக்கும் கோழையைத் தளர்த்தி சளியை வெளியேற்றுகிறது.




## க்ளைகோடின்

**டெர்ப் வசாகா**

இருமல்களுக்கு,
மிக அதிகமாக
விற்பனையாகும்
நம்பகமான
வீட்டு நிவாரணி

everest/599-i/ACW tm

# ஸ்டெல்லாவின் செல்லக் கிளி



புதுப்பேட்டையில் உள்ள ஒரு வீட்டில் திரு ஹ்ருதயராஜ் குடியிருக்கும் பகுதியில் மாடித் தாழ்வாரம். சுமார் மூன்றடி நீளம், இரண்டரை அடி உயரம், ஓரடி அகலத்தில் கம்பிப் பலகைகளால் செய்துவலைபொருத்தப் பெற்ற ஒரு கூண்டில் மூன்று சிறு வண்ணப் பறவைகளைக் காண்கிறோம். கூண்டுக்குள் ஒரு சின்ன ஏணி. அதன் படிகளில் பறவைகள் ஒய்யாரமாக உட்காருவதும் பின்னர் கூண்டுக்குள் பறப்பதும் பார்க்க அழகாகத்தான் இருக்கிறது. மஞ்சள் நிற மேனியில் அங்கங்கே இளம் பச்சைக் கீற்றுக்கள். கண்ணைப் பறிக்கும் வண்ணக் கலவை!

கூண்டின் ஒரு பகுதியில் இரு சட்டிகள் கவிழ்த்து, 'ப' வடிவில் கழுத்துப் பகுதியில் வெட்டி விடப்பட்டுள்ளன — கும்மட்டியின் வாய்போல. இச்சட்டிகள் எதற்கு?

"பறவை சட்டிக்குள் முட்டை இட்டிருக்கிறது. ஆணும் பெண்ணும் மாறி மாறி அடை காக்கின்றன" என்று கூறுகிறார் திரு ஹ்ருதயராஜ். உற்றுப் பார்த்த பிறகு சட்டிக்குள் முட்டை இருப்பது தெரிகிறது. மூன்று வாரங்கள் அடை காத்த பிறகு குஞ்சு முட்டையிலிருந்து வெளிப்படுமாம்.

"இப்பறவைகளுக்கு என்ன உணவு?"

"தினை, கம்பு, கேழ்வரகு இம்மூன்று தானியங்களையும் கலந்து, நாளைக்கு ஓர் ஆழாக்கு வீதம் கூண்டுக்குள் ஒரு தட்டில் வைத்துவிடுவோம். அன்றாடம் காலையில் நீரும் புதிதாக வைக்க வேண்டும். இன்னொரு பெரிய பாத்திரத்திலும் நிறைய நீர் வைப்போம். நீரில் சிறிதளவு பொட்டாஷியம் பர்மாங்கனேட் கலப்பது நல்லது. நோய்க் கிருமிகள் மறைந்து விடும். பறவைகள் மிகவும் சுத்தமான இனம். நாள்தோறும் இரு தடவைகள் இறகுகளை நீரில் நனைத்துக் குளித்து விடுகின்றன. இவற்றுக்கு வழங்கும் தானியக் கலவைக்காக மாதம் பத்துப் பன்னிரண்டு ரூபாய் செலவானாலும் அது ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. குழந்தைகளுக்கு நல்ல பொழுது போக்கு" என்கிறார் ஹ்ருதயராஜ்.

ஏழு வயதுச் சிறுமி ஒருத்தி கையில் ஒரு பச்சைக் கிளியை ஏந்தியவாறு நுழைகிறாள்.

"என் மகள், ஸ்டெல்லா மேரி. கிளி எங்கே தன்னைக் கொத்தி விடுமோ என்று இவளுக்கு உள்ளூறக் கிலிதான்! இருந்தாலும் கிளியிடம் ஆசை அதிகம். இது எங்கள் வீட்டுக்கு வந்து மூன்று மாதமே ஆகிறது. இதற்கு முன்பு ஒரு கிளி இருந்தது. பாலி என்று பெயர். 'பாலி டியர்! ஹௌ ஆர் யூ. ப்ளீஸ்?' என்று அது கேட்கும்பொழுது வெகு இனிமையாக இருக்கும்."

"அதைத்தான் ஒரு பூனை கவ்விக் கொண்டு போய் விட்டதே?" என்று அருகிலிருந்த அவர் மகன் ஜான் சோகம் ததும்பக் கூறுகிறான்.

"கிளியை வளர்த்துப் பூனை கையில் கொடுத்து விட்டார்களாக்கும்?" என்று நான் வேடிக்கையாகக் கேட்கிறேன். ஹ்ருதயராஜ் கூறுகிறார்: "கிளி வளர்ப்பவர்கள் வீட்டில் ஒரு பூனையையும் வளர்த்தால் அப்பூனையே கிளிக்கு ஒரு பாதுகாப்பு! கிளியுடன் ஒரே வீட்டில் வளர்ந்து பழகிய பூனை கிளியை ஒன்றும் செய்யாது. கிளியை அது தாக்காமல், நட்புறவோடு வாழும்படி பூனையைப் பழக்கிவிட முடியும். பின்பு, வேறு பூனை ஏதாவது வந்து கிளியைத் தாக்கினால், வீட்டுப் பூனை அதனை எதிர்க்கும்."

"கிளிக்கு என்ன ஆகாரம்?"

"சமைத்த சாதத்தை நன்கு விரும்பிப் புசிக்கும். நாங்கள் சாப்பிடும்போது எங்கள் அருகிலேயே வந்து அமர்ந்து அதுவும் சாப்பிடும். தக்காளி முதலிய பழங்களும் கொடுப்போம்."

"ஒரே ஒரு கிளிதான் இருக்கிறதா? ஜோடியாக வளர்த்தால் நல்லது இல்லையா?" என்ற என் சந்தேகத்தை வெளியிடுகிறேன்.

"இயற்கைச் சூழ்நிலையில் அவை எப்படி ஒற்றுமையாக வாழ்கின்றனவோ, தெரியாது. வீட்டில் ஜோடியாக வளர்த்தால் அவற்றிடையே அடிக்கடி சண்டைதான். தவிர, ஒற்றையாக இருக்கும் பொழுதுதான் அது நம் பேச்சைக் கேட்டுத் திரும்பப் பேசும். ஜோடியாக இருந்தால், கிளிக்குப் பேசப் பயிற்சி அளிக்க முடியாது!" என்கிறார் திரு ஹ்ருதயராஜ்.

பேட்டி : பாணன்



# ஆறு கைகள் இருந்தாலும் போறாது போலிருக்கே!

## ஒரு Prestige பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் வாங்கிவிடுங்கள்!




### பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் உங்கள் பொன்னான சமையல் நேரத்தில் ஒருமணி மிச்சமாக்குகிறது

சமையல் பிரச்சினையை எளிதாக்கவே தயாராகிறது பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர். பிரஸ்டிஜ் சமையல் வழக்கமான சமையலுக்காகும் நேரத்தில் கால்பங்கு நேரத்திலே தயார். அது எளிதானது. அத்துடன் பத்திரமானதும்கூட. 12 வயது சிறுமி கூட கையாளலாம். எரிபொருள் செலவில் எத்தனையோ மிச்சம். பிரஸ்டிஜ் இருந்துவிட்டால சமைக்கும்போது குழப்பமோ, தடுமாற்றமோ இருக்காது. ஏனெனில் அதில் ஒரே சமயத்தில் மூன்றுவகை சமைக்கலாம். பிரஸ்டிஜில் தயாரான உணவில் சத்து, ருசி, மணம் முதலியவை குறைவதில்லை. பிரஸ்டிஜ் ஆயுட்கால உத்தரவாதம்கொண்டது. நாடெங்கும் விற்பனைக்குப் பின்பும் பராமரிப்புக்கு வசதியுள்ள பிரஷர்குக்கர் பிரஸ்டிஜ் ஒன்றே.

பிரஸ்டிஜ் ஐந்து அளவுகளில் உள்ளன. உங்கள் குடும்பத்திற்குதேவையான அளவை தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.




டிடி.(பிரைவேட்) லிமிடெட், பெங்களூர்-16.

TTP-5799

## அத்தியாயம் 9

மிஸ் சோபனா ஜோஷி என்ன பொருளில் குப்தாவைப் பற்றிக் குழந்தை யென்று சொன்னாளோ, தெரியாது. ''ஆமாமாம்; அவன் ஒரு குறுகுறுப்பான குழந்தை. உலகமே தெரியாத குழந்தை!'' என்று அவளோடு பாஸ்கரனும் சேர்ந்து கொண்டு சொன்னான்.

''கள்ளம் கபடு இல்லாத, ஆனால் படிப்பினால் உடல் மெலிந்து போன குழந்தை; சரியாக அழக்கூடத் தெரியாத பாப்பா!'' என்று அவள் கண்கள் பளபளக்கச் சொல்லி விட்டு, இந்தப் பக்கமே பார்த்துக் கொண்டிருந்த குப்தாவைப் பார்த்து மிகவும் செல்லமாக விரல்களினால் விசிறிக் காட்டினாள்.

இந்தச் சோபனாவுக்குக் குப்தாவிடம் என்னவோ பொறாமைதான் என்று எண்ணிக் கொண்டான் பாஸ்கரன். தன்னிடம் நெருங்கிப் பழக அந்த இருவருமே போட்டி போடுவது போல் அவனுக்குப்பட்டது.

''என்ன பார்க்கிறீர்கள், பாஸ்கர்? நீங்கள் இப்பொழுது சொல்லுங்களேன், யாரிடம் யாருக்குப் பொறாமை என்று'' என்றாள் சோபனா.

அவன் மனத்தால் நினைத்ததை அவள் வாயினால் சொன்னதைக் கேட்டு, ஒருகணம் அசந்தே போனான் பாஸ்கரன்.

''நீ என்ன, எதிலே டாக்டர்?... சைக்காலஜியிலா?''

''டாக்டர்களுக்கு சைக்காலஜியும் தெரிந்திருக்க வேண்டும்.''

''நான் என்ஜினீயர். எனக்கு என்ன தெரியும் அதைப் பற்றி!''

''உண்மைதான். உங்களுக்கு இதைப் பற்றி ஒன்றும் தெரியாதுதான்!''

''ஆனால் உனக்கு அவனிடம் என்னமோ பொறாமை என்று மட்டும் இப்போது தெரிகிறது. காரணம்தான் தெரியவில்லை.''

மிஸ் சோபனா ஜோஷி மிருதுவாக நயந்து நகைத்து விட்டு, ''மிஸ்டர் பாஸ்கர்! தப்பாக எடுத்துக் கொள்ளாமல் இருந்தால் ஒன்று கேட்கிறேன். ஒளிக்காமல் சொல்லுங்கள். உங்களை இதுவரையில் எந்தப் பெண்ணும் நேசிக்க வில்லையா?'' என்று உருக்கமாகக் கேட்டாள்.

''ஏன் அப்படிக் கேட்கிறாய், திடீரென்று?''

''காரணமாகத்தான் கேட்கிறேன். என் ஊகம் சரியானால் இதற்குள்ளேயே ஒருத்தியின் நெஞ்சிலே நீங்கள் புகுந்துதான் இருக்க வேண்டும்.''

''அதென்னமோ எனக்குத் தெரியாது. என் நெஞ்சில் அப்படி யாரும் இதுவரையில் புகவில்லை என்று நிச்சயமாகத் தெரியும்.''

''சரி போகட்டும்; இது வரையில் இல்லையென்றால் விரைவிலேயே ஒருத்தியின் இதயத்தை நீங்கள் கவரத்தான் போகிறீர்கள். அதில் சந்தேகமில்லை.''

''இது என்ன, ஜோசியமா சொல்கிறாய்?''

''ஜோசியம் ஒன்றும் இல்லை. உங்களை எப்படி இத்தனை நாட்கள் விட்டு வைத்திருந்தார்கள் என்றுதான் எனக்குத் தெரியவில்லை. உங்களுக்கே தெரியுமோ என்னமோ! இள மங்கையின் கோமளமான இதயத்தைக் கவருகிற அம்சங்கள் அத்தனையும் உங்களிடம்இருக்கின்றன.''




''இந்தப் பாராட்டுக்கு ரொம்ப நன்றி'' என்றான் பாஸ்கரன்.

''நீங்கள் இதை எப்படி எடுத்துக் கொண்டாலும் சரி; உண்மையைத் தான் நான் சொல்கிறேன். அதிலும் அமெரிக்காவில் இருக்கிற வரையில் நீங்கள் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். உள்ளத்தைக் கவருகிற வாய்ப்பு இரு தரப்புக்குமே அதிகம் உண்டு!''

''வாய்ப்புக் கிடக்கட்டும். என் விஷயத்தில் என்ன நடக்க வேண்டும் என்று நீ எதிர்பார்க்கிறாய்?''

''சொல்லட்டுமா? என்ன ஆனாலும் சரி; உங்கள் நெஞ்சைக் கவர்கிறவள் நம்முடைய நாட்டைச் சேர்ந்தவளாக

இருக்கட்டும். அதைத்தான் நான் உங்களிடம் எதிர்பார்க்கிறேன்!''

''நீ என்ன சொல்வாய் என்று நானும் இதைத்தான் உன்னிடம் எதிர்பார்த்தேன்!'' என்றான் பாஸ்கரன்.

அமெரிக்கா போய்ச் சேர்கிற வரையில், போய்ச் சேர்ந்து பல மாதங்கள் வரையில்கூட, பாஸ்கரன், குப்தா, மிஸ் சோபனா ஆகிய மூவரும் அடிக்கடி சந்தித்து அளவளாவிப் பேசிக் கொண்டுதான் இருந்தார்கள். ஒரு வருஷப் படிப்பு முடிந்து ஊருக்குத் திரும்புகிற சமயத்தில்தான் சோபனா உண்மையை வெளியிட்டாள். ஆரம்பத்திலிருந்து அவள் உள்ளத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கவர்ந்து கொண்டதுடன் தன் உள்ளத்தைச் சன்னம் சன்னமாகப் பறி கொடுத்தும் விட்டானும் அந்த ஹரிநாராயண குப்தா! பாவம், அவன் குழந்தை! பாப்பா!

* * *

மிஸ் சோபனா ஜோஷியின் காதலைப் பற்றி ஒரு வருஷம் வரையில் ஒன்றுமே தெரிந்துகொள்ளாமல் போனது பாஸ்கரனுக்கு அதிசயமாகத்தான் இருந்தது. அவளைப் பற்றி அவன் நினைத்திருந்ததெல்லாம் இப்படியா பொய்த்துப் போகும்? அவன் வரையில் இது இன்பம் கலந்த ஏமாற்றமாக முடிந்து விட்டது.

ஹரிநாராயண் குப்தாவின் விஷயம் எப்படியோ, தெரியாது. ஆனால் மிஸ் சோபனா ஜோஷியின் காதலுக்குத் தான் ஏற்றவனல்ல என்பது மட்டும் நிச்சயம் பாஸ்கரனுக்குத் தெரியும்.

வெவ்வேறு கல்லூரிகளில் படித்தாலும் அநேகமாக ஒவ்வொரு வாரக் கடைசியிலும் அவர்கள் சந்தித்துக் கொண்டார்கள். மிஸ் சோபனா ஜோஷி அந்த வேளைகளிலெல்லாம் பாஸ்கரனிடம்தான் அதிகமாக உரையாடினாள். அவனிடம்தான் யோசனை கேட்டு நடந்து கொண்டாள். அப்படியிருந்தும் அவளுக்கும் ஹரிநாராயண் குப்தாவுக்கும் இடையே அன்பு கலந்து பிறந்த காதல் அரும்பியதும் அவனுக்குத் தெரியாது; மணம் கமழ மலர்ந்ததும் தெரியாது. இதுதான் அவனுக்கு எப்படி என்று புரியவில்லை.

மூவரும் அடிக்கடி சந்தித்துக்கொண்டாலும் இதயத்தில் அவர்கள் இருவர் மட்டுமே சந்தித்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற உண்மை கடைசியில் தான் அவனுக்குத் தெரிந்தது. தனித்துச் சந்திக்காமலே, வாய்விட்டு வெளிப்படையாகப் பேசிக் கொள்ளாமலே தங்களிடையே அரும்பிய காதலை அவர்கள் போஷித்து வளர்த்து வந்த நேர்த்தியைப் பற்றியும் அவர்கள் பரிமாறிக் கொண்ட எதிர்காலத் திட்டங்கள் பற்றியும் அப்புறம்தான் பாஸ்கரன் விவரமாக அறிந்து கொண்டான். பாஸ்கரனுக்குத் தெரியாமலே அந்த ஓராண்டுக் காலத்துக்குள் அவர்கள் நூற்றுக்கணக்கான கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்திருக்கிறார்கள். சோபனா சொல்லாமல் இருந்தது சரி; ஹரிகுப்தா எப்படி இதுபற்றி ஒன்றுமே சொல்லாமல் இருந்தான்? அவர்கள் சந்திக்கும்போதெல்லாம் அவள் ஒவ்வொரு தடவையும் பாஸ்கரனுக்குத் தெரியாமல் ஹரியின் கையில் ஒரு கடிதத்தைத் திணித்திருக்கிறாள். எத்தனை சாமர்த்தியம் அவளுக்கு!

''அவள் கொடுத்த சாமர்த்தியம் இருக்கட்டும்; நீ எப்படி வாங்கிக்கொண்டாய்? துளிக்கூட நீ அதைப் பற்றி இது வரை மூச்சுக் காட்டவில்லையே? எனக்குத் தெரியக் கூடாது என்று அவள் தடுத்திருந்தாளா?''

பெண்களின் நாணம் போல் ஹரிநாராயண் குப்தாவின் முகம் வெட்கத்தால் சிவந்து போயிற்று.

''ஊஹும்; இல்லை. நான்தான் அவளிடம் சொல்லியிருந்தேன்.''

''வெட்கமா, பயமா?''

''இரண்டும்தான்!''

''உனக்கு என்னிடம் என்ன வெட்கம்? பயம்?''

''வேறு யாரிடம் போய் வெட்கப்படச் சொல்கிறாய்? வேறு யாரைப் பற்றியும் எனக்குக் கவலையில்லை.''

ஆரம்பம் முதலே சோபனா பேசிய வார்த்தைகளையும், நடந்து கொண்ட மாதிரியையும் ஆர அமர யோசித்துப் பார்த்தபோதுதான் அவளிடம் என்றைக்கும் எந்தவிதமான முரண்பாடும் இல்லை என்ற உண்மை பாஸ்கரனுக்குப் புரிந்தது. மிலான் விமான நிலையத்தில் அவனிடம் வலிய வந்து பேசியதிலிருந்து கடைசி வரையில் அவள் ஒரே மாதிரியாகத்தான் நடந்து கொண்டிருந்திருக்கிறாள். அவளுக்குப் பொறுமையெல்லாம் ஹரிநாராயண் குப்தாவிடம் இல்லை; தன்மீது என்பது அப்புறம்தான் அவனுக்குத் தெளிவாயிற்று. அவன்தான் அவளைப் புரிந்துகொள்ளத் தவறி விட்டான். அவள் பேசியவற்றுக்கெல்லாம் ஒரே பொருள்தான். அவன்தான் தப்புக் கணக்குப் போட்டு விட்டான். ஹரியின் அன்பைக் கவருவதும் அவனுடைய நெஞ்சில் நீங்காத இடத்தைப்



பெறுவதும்தான் அவளுடைய முக்கியமான குறிக்கோள். அதில் அவள் முழுவதும் வெற்றி பெற்றுவிட்டாள். பாஸ்கரனுக்கும் வெற்றிதான். இந்த மாதிரி விவகாரங்களிலிருந்து அவன் தப்பியதே ஒரு வெற்றிதானே!

உண்மையில் மிஸ் சோபனா ஜோஷியின் காதல் தோற்றமும் அதன் ஆரோக்கியமான வளர்ச்சியும் கேட்பதற்கே இனிய காவியம் போல இருந்தது அவனுக்கு. ஹரிநாராயண் குப்தாவிடம் அவளுக்கு உண்டான கழிவிரக்கம், மெல்ல மெல்ல அன்பாக உருப்பெற்று, காதலாகக் கனிந்த மாயம் அனைத்தும் வெகு இயற்கையாகவும் இந்தியப் பண்புக்கு முரண் இல்லாமலும் அதே சமயத்தில் அசாதாரணமாகவும் இருந்தது.

மிஸ் சோபனா ஜோஷி காதலில் தவறுதது போலவே, கடமையிலும் தவறாமலே, வந்த காரியத்தைப் பெருமை சேர முடித்துக் கொண்டு, இதயத்தை இல்லினாய்ஸிலிருந்த ஹரி நாராயண் குப்தாவிடமே ஒப்படைத்து விட்டு, சொந்த நாட்டுக்குப் புறப்பட்டாள். பாஸ்கரனுக்கும் அவனுக்கும் இப்போது மேல்படிப்புப் பூர்த்தியாகியிருந்தது. நேரிடைப் பயிற்சி பெறுவதற்காக மேலும் ஆறு மாதங்கள் ஏதாவது ஒரு நிறுவனத்தில் சேர்ந்து வேலை செய்ய வேண்டியிருந்தது. சோபனாவுக்கு இவர்களை யெல்லாம் விட்டுப் பிரிந்து செல்வதில் வருத்தம்தான்.

''சொந்த நாட்டுக்குப் போகிற சந்தோஷமே எனக்கு வரவில்லை'' என்றாள் அவள், விமான கூடத்தில்.

''புரிகிறது'' என்று சொன்னான் பாஸ்கரன்.

''உங்களுக்குச் சரி; ஆனால் உங்கள் நண்பருக்கு அப்படி ஒன்றும் புரிந்தது போலத் தெரியக் காணோமே!''

''ஹரிக்கு இப்போதெல்லாம் எதையும் பிறருக்குத் தெரியாமல் மறைத்து வைத்துக் கொள்கிற பழக்கம் மிக நன்றாக வந்திருக்கிறது.''

சோபனா இதைக் கேட்டுச் சிரித்து விட்டு, ''இதுவரையில் இருந்திருக்கலாம். இனிமேலும் இந்தப் பழக்கமெல்லாம் இருக்கலாமா? இந்தப் பழக்கத்தை மறக்கும்படி நீங்கள்தான் செய்ய வேண்டும். உங்களிடம் அவரை இந்தப் பொறுப்போடு சேர்த்துத்தான் ஒப்படைத்து விட்டுப் போகிறேன்!'' என்றாள்.

இதைச் சொல்லும்போது அவள் கண்களில் கண்ணீர் கசிந்து நின்றது. விழிக்கடையில் துளித்த கண்ணீரோடு அவளைக் கடைசியாக விமான கூடத்தில் கண்ட தோற்றம் அவர்களுடைய நெஞ்சில் மிக ஆழமாகப் பதிந்து விட்டது. பம்பாய் திரும்பியதுமே, அவள் கேபிள் கொடுத்திருந்தாள். அதற்குப் பிறகு அவளிடமிருந்து தொடர்ந்து தபால்கள் வந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு தடவையும் அவளுடைய கடிதத்தைப் பெற்றுக் கொண்டதும், ஹரிநாராயண் குப்தாவின் கண்களும் ஒரு கணம் கலங்கி நிற்கும். ஆனால் மறு கணமே அவன் தலையை உலுக்கிக் கொண்டு தன் வேலையில் ஈடுபட்டுவிடுவான். மிஸ் சோபனா ஜோஷி சரியாகத்தான் சொன்னாள், அவன் ஒரு குழந்தை என்று. எந்தக் குழந்தைக்குமே சந்தோஷமோ, அழுகையோ ஒரு நிமிஷத்துக்கு மேல் நிலைத்திருப்பதுண்டா? அழுத கண்ணீரோடு சிரித்துவிடும்; சிரிப்பே அழுகையாக முடிந்து விடும். அப்படித்தான் ஹரியும் இருந்தான்.

அவனைப் போல் தன்னால் இருக்க முடியவில்லையே என்று பாஸ்கரனுக்குக் குறைதான். அதிலும் சென்னையிலிருந்து நாகலக்ஷ்மி மாமி காலமாகி விட்டாள் என்று அவனுடைய அம்மா கடிதம் எழுதியிருந்ததைப் படித்தபோது அவன் அப்படியே இடிந்து போய் உட்கார்ந்து விட்டான். ஏதனாலோ இந்தச் செய்தியை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. இரண்டு நாட்கள் போல எந்த வேலையும் அவனுக்கு ஓடவில்லை.

''உங்களை யெல்லாம் கண்டால் அலட்சியம் என்று சொல்வாயே, அந்த மாமிதானே இவள்? இதற்கு ஏன் இவ்வளவு வருத்தப்படுகிறாய்?'' என்று கேட்டான் ஹரி.

''என்ன இருந்தாலும் அவள் எனக்கு மாமி இல்லையா? அவள் கையால் ஒரு வேளையாவது சாப்பிட்டிருப்பேனே! எத்தனை ஆசைப்பட்டு அவசரம் அவசரமாகத் தன் பெண்ணுக்குப் பெரிய இடமாகப் பார்த்து மாப்பிள்ளை தேடி வைத்தாள்! பாவம், அதை இன்னும் கொஞ்சம் காலமாவது இருந்து பார்த்துச் சந்தோஷப்படாமல் போய் விட்டாளே!'' என்றான் பாஸ்கரன்.

''அதற்கு யார் என்ன செய்யலாம்? உலகத்தில் அப்படித்தான் சில பேர் அவசரம் அவசரமாகக் காரியங்களை வீம்பாகச் செய்துவிட்டு, அதைவிட அவசரமாகக் கண்ணையும் மூடிக் கொண்டு போய்விடுகிறார்கள். இதுபோல எத்தனையோ பார்த்ததில்லையா?''

''பார்க்கப் போனால் மாமாதான் எப்போதுமே உடம்பு சரியில்லாதவர். மாமி நல்ல திடமாகத்தான் இருந்தாள். இருந்தும் அவள் எப்படிப் போனாள்? நம்பவே முடியவில்லை. ஆனால் அம்மா எழுதியிருக்கிறாளே!''

''இப்படிப் போய் விடுவோம் என்று தானோ என்னவோ, உனக்குத் தன் பெண்ணைக் கொடுக்க அத்தனை அவசரப்பட்டிருக்கிறாள். அது நடக்கவில்லை. கையோடு வேறு இடத்தில் முடித்துக் கொண்டு கண்ணை மூடி விட்டாள்.''

''அப்படித்தான் நினைக்க வேண்டியிருக்கிறது. அறிதாவை நினைத்தால் தான் இன்னும் வருத்தமாக இருக்கிறது!''

''உனக்கு இருக்கலாம். ஆனால் அவள் எப்படி இருக்கிறாளோ? அவள்தான் கல்யாணம் ஆனவுடனேயே குஷியாகத் 'தேன் நிலவு'க்குப் பல நாடுகளுக்கெல்லாம் போய்விட்டு வந்தவளாச்சே! அத்தனை வசதியில் இருப்பவளைப் பற்றி வருத்தப்பட என்ன இருக்கிறது?

கல்யாணம் என்று ஆகிவிட்டால் அப்புறம் பெண்களுக்கு அதற்கப்புறம் அப்பாவாவது, அம்மாவாவது! எல்லாம் அவர்களோடு இருக்கிற வரையில் தான். அப்புறம் ஒன்றுமே யில்லை. எனக்குத் தெரியும். எங்கள் அக்காவுக்கு எங்கள் அம்மா செத்துப்போன துக்கம் கொஞ்ச நேரம்தான் இருந்தது. கண்ணீர் ஈரம் வற்றுவதற்குள் அம்மா போட்டுக் கொண்டிருந்த வைர நெக்லேஸ்மீது அவள் நினைவு போய் விட்டது!''

ஹரி படிப்பைத் தவிர மற்ற உலக விவகாரங்களை ஊன்றிப் படித்திருப்பான் என்பதைப் பாஸ்கரனால் நம்ப முடியவில்லை.

ஹரிநாராயண் குப்தா அதிகமாகப் பேசமாட்டானே தவிர, அப்படி ஒன்றும் விஷயம் தெரியாதவன் அல்ல. சோபனாவைக் கவர்ந்த அந்தக் குழந்தைக்கு எந்த விஷயத்தையும் மௌனமாகவே இருந்து புரிந்து கொள்கிற சாமர்த்தியம் அதிகம். பாஸ்கரனுடைய நெஞ்சத்தில் இப்போது அஜிதாவுக்கோ அல்லது வேறு எந்தப் பெண்ணுக்கோ இடம் இல்லை என்பதை அவன் தெரிந்து கொண்டுதான் இருந்தான். பாஸ்கரனுடைய நெஞ்சில் நிறைந்திருப்பதெல்லாம் தொழில் துறையில் முன்னேறுவதற்கு வழி என்ன என்ற யோசனை ஒன்றுதான் என்பதும் அவனுக்குத் தெரியும்.

## அத்தியாயம் 10

**ப**ம்பாய், சாந்தாக்ரூஸ் விமான நிலையத்துக்கு ஹரிநாராயண் குப்தாவையும் பாஸ்கரனையும் வரவேற்கத் தம் பெற்றோர்களுடனேயே வந்திருந்தாள் டாக்டர் மிஸ் சோபனா ஜோஷி. ஆறு மாதங்களுக்குப் பிறகு பார்க்கிற ஹரிநாராயண் கண்களுக்கு அவள் அழகே பூத்து நிற்பது போலத் தோன்றினாள். பெரிய விழிகளும், தளதளப்பான மேனியுமாய், சரியான உயரமும் கச்சிதமான பருமனுமாய், வண்ணச் சிற்றுடையணிந்து அவள் நின்ற கோலம் அவன் கண்ணை பட்டுவிடும் போலிருந்தது.

''யூ, மை ஏஞ்செல்!'' என்று விமானப் படியிலிருந்தபடியே அவன் கைகளைத் தூக்கினான்.

சோபனாவும் கூட்டத்தில் நின்றபடியே கைகளைப் பதிலுக்குத் தூக்கி வரவேற்றாள். அருகில் வந்ததும் அவள் அவனை என்ன செய்து விடுவாளோ என்று பாஸ்கரன் சற்றுப் பயந்து போனான். அப்படி ஒரு தேக்கம் நடுவில். ஆனால் நல்ல வேளையாக விபரீதமாய் எதுவும் நடந்து விடவில்லை. விழிகளால் அவனைப் பருகியபடியே அவள் விலகியே நின்றாள்.

புத்தம் புதிய நம்பிக்கைகளோடும், புதுமையான பல திறமைகளோடும் புதிய திட்டங்களோடும் வந்திருந்த அவர்கள் முகத்தில் ஒரு தன்னம்பிக்கை ஒளி வீசியது. சோபனாவின் பெற்றோர்கள் அப்போதே ஹரியைத் தங்கள் மாப்பிள்ளையாக வரித்து, பாஸ்கரனை மாப்பிள்ளைத் தோழனாக ஆக்கித் தடபுடலாக உபசரித்தார்கள். மாப்பிள்ளைக்குக் களைப்போ, கால் வலியோ என்று அநாவசியத்துக்கெல்லாம் கவலைப் பட்டார்கள். ஹரியைக் காட்டிலும் அவர்கள் வெகுளிகளாக இருந்தார்கள். பாஸ்கரனுக்கு எடுத்த எடுப்பிலேயே அவர்களை மிகவும் பிடித்து விட்டது.

அன்னை பூமியின் மடியில் அடியெடுத்து வைத்ததுமே இனி அடுத்தது என்ன என்ற கேள்விக்கு ஒரு சரியான விடையோடு வந்திருந்தார்கள் நண்பர்கள் இருவரும். அமெரிக்கா போன்ற வெளிநாடுகளில் வெவ்வேறு துறைகளில் விசேஷப் பயிற்சி பெற்றுத் திரும்பிய பலருடைய கதைகளை அவர்கள் வேண்டிய மட்டும் கேள்விப் பட்டிருந்தார்கள். ஆகவே அரசாங்கத்தின் கையை எதிர்பாராமல் சொந்தமாக ஏதாவது ஒரு புதிய தொழிலை நிறுவுவது என்ற முடிவுடன் வந்திருப்பதை அறிந்த சோபனா மிகவும் சந்தோஷப்பட்டாள்.

அரசாங்க வேலைக்குப் போகாவிட்டாலும் அரசாங்கத்தின் கையை எதிர்பார்க்காமல் ஒரு தொழிலையும் நிறுவ முடியாதே என்று சந்தேகப்பட்டார் ஜோஷி. இருந்தாலும் அவர்கள் இருவரையும் தங்கள் சொந்த இருப்பிடமான அகமதாபாத்துக்கு வந்து விட்டுப் போக வேண்டும் என்று வற்புறுத்தி வேண்டிக் கொண்டார். சோபனாவும் சேர்ந்து கொள்ளவே, ஹரிநாராயண் குப்தாவுக்கு வேறு வழியில்லை. ஆனால் பாஸ்கரன் மெதுவாகத் தப்பித்துக் கொண்டு விட்டான்.

மறுபடியும் விரைவில் சந்திப்பதாக ஏற்பாடு செய்து கொண்டு மறுநாள் அவன் சென்னைக்குப் பயணமானான். பம்பாயில் தங்கியிருந்த அன்று இரவில் அவன் அஜிதாவோடு டெலிபோனில் தொடர்பு கொள்ள முயன்று பார்த்தான். அவள் பம்பாயில் மிகவும் வசதியாக இருப்பதாக அம்மா அவனுக்கு எழுதியிருந்தாள். டெலிபோனில் ஒரு விதமாக நம்பர் கிடைத்தது; தொடர்பும் கிடைத்தது. ஆனால் அஜிதாதான்




"எப்பேர்ப்பட்ட எழுத்தாளர் தெரியுமா! கண்ணைக் கட்டிப் போட்டாக்கூடக் கதை எழுதுவதை நிறுத்த மாட்டார்."

"கைகளையும் கட்டிப் போட்டுப் பாருங்கள்!"

லையனில் கிடைக்கவில்லை. யார் யாரோ வந்து வந்து விசாரித்தார்கள். ஆனால் யாருக்கும் அஜிதா வீட்டில் இருக்கிறாளா, இல்லையா என்று சொல்லத் தெரியவில்லை. அஜிதாவையே தெரிந்தவர்களாக அவர்கள் காட்டிக் கொள்ளவில்லை. வெகுநேரம் ரிஸீவரைக் காதில் வைத்துக் காத்திருந்த பிறகு தடிப்பான குரலில் யாரோ அதிகாரமாகப் பேசினார்கள். கிட்டத்தட்ட அடிக்க வருவதுபோலிருந்தது பேசிய தோரணை.

"யாரு அங்கே பேசறது?"

"என் பேர் பாஸ்கரன்; அமெரிக்காவிலேருந்து வந்திருக்கேன். மெட்ராஸ்......"

"சரி; யார் வேணும்?"

"அஜிதா — அதாவது அஜிதா முரளீதரன்!"

"ஷீ இஸ் நாட் ஹியர்!"

"பட் மே ஐ....." என்று பாஸ்கரன் ஏதோ சொல்ல வருவதற்குள் பட்டென்று மண்டையில் அடிப்பதுபோல் எதிர்ப்பக்கம் ரிஸீவரைத் 'தொட்டி'யில் வைக்கும் சத்தம் கேட்டது.

சரியான அநுபவம். இன்னொரு தடவை முயன்று பார்க்கிற தைரியம் அவனுக்கு வரவேயில்லை.

"இந்திய நாடாம்; பண்பாடாம்; வாய்தான் கிழிகிறது நமக்கு!" என்று முணுமுணுத்து விட்டு, டெலிபோன் டைரக்டரியில் கண்ட முகவரிக்கு நேரிலேயே போய் விசாரிக்கலாமா என்று கூட ஒரு கணம் நினைத்தான். பிறகு அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டான். அந்தத் தடித்த குரல் பதில் சொன்ன மாதிரியிலிருந்து அந்த முயற்சியை மேற்கொள்ளாமல் இருப்பதுதான் மரியாதை என்று தோன்றி விட்டது. அந்த நேரத்தில் அல்சேஷியனை மேலே பாய்ந்து பிடுங்க வராது என்பது என்ன நிச்சயம்?

பம்பாயில் வந்து தங்கியிருந்தும் அஜிதாவைப் பார்க்காமலும் அநுதாபமாக இரண்டு ஆறுதல் வார்த்தைகள் சொல்லாமலும் போகிறோமே என்று அவனுக்கு வருத்தமாகத்தான் இருந்தது. அஜிதா இத்தனை எட்டாத உயரத்தில் இருப்பாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

"ஷீ இஸ் நாட் ஹியர்!" என்றால் என்ன அர்த்தம்? அவள் அந்தச் சமயத்தில் வீட்டில் இல்லையா, அவள் இருப்பது அந்த வீடே இல்லையா — எது என்று கேட்டுத் தெரிந்துகொள்ள வழியே இல்லாமல் போய் விட்டதே! பேசினவன் ஒரு சமயம் வீட்டின் எஜமானனாக — அதாவது அஜிதாவின் மாமனாராக — இருப்பானோ? இருந்தால் நல்ல குணவான்தான்! அஜிதா சரியான இடத்துக்குத்தான் வந்து சேர்ந்திருக்கிறாள்!

மறு நாள் காலையில் விமான நிலையத்துக்குப் போகுமுன் கடைசித் தடவையாகப் பார்த்து விடுவோம் என்று டயல் செய்து பார்த்தான். எதிர்ப் பக்கம் மணி அலறிக் கொண்டேயிருந்தது. ஆனால் ரிஸீவரைக் கையில் எடுப்பாரைத்தான் காணோம். பாஸ்கரனுக்குப் பெருத்த ஏமாற்றம்.

போனை வைத்துவிட்டு அவன் விமான நிலையத்தை நோக்கிச் சென்றான். விமானத்தில் காலை வைத்த மறு கணம் முதலே அஜிதாவைப் பற்றிய நினைவை அடியோடு மறந்து விட்டான். விமானத்தில் போய் அமர்ந்ததுமே அவனுக்கு ஊர் நினைவு வந்து விட்டது. பல இனிய முகங்கள் அவன் கண் முன்னே தோன்றின. அம்மாவையும் அண்ணனையும் மன்னியையும் குழந்தைகளையும் நெருங்கிய நண்பர்கள் பலரையும் பார்க்கப் போகிறோம் என்கிற ஆனந்தத்தில் அவன் தோய்ந்து போனான். யார் யாரெல்லாம் விமான நிலையத்துக்கு வந்திருப்பார்கள் என்று எண்ணிப் பார்த்தான். விமானம் தரையை விட்டு எழும்பியதிலிருந்து இத்தனை நேரமும் அவனை அடிக்கடி ஒரு முகம் எதிர்வரிசையிலிருந்து திரும்பிப் பார்த்தபடி இருந்ததை அவன் கவனிக்கவில்லை.

(தொடரும்)






தமிழாக்கம்: ராஜாஜி

## 50 - (11)

"உங்கள் சாஸ்திரங்களுக்குள் எது பிரமாணம்?" என்று பாலில் மாத்யூஸ் என்பவர் கேட்டார்.

காந்திஜி தம் மார்பைத் தொட்டுச் சொன்ன பதில்: "பிரமாணம் இங்கே இருக்கிறது."

கீதையுள்பட சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட எதையுமே என்னுடைய அறிவைக் கொண்டுதான் பார்க்கிறேன். என்னுடைய பகுத்தறிவுக்கு விரோதமாயிருந்தால் அதை நான் ஒப்புக் கொள்வதில்லை. சாஸ்திரமாகக் கருதப்படும் நூல்கள் தெய்விக உணர்ச்சியைப் பெற்று எழுதியவை தான். ஆயினும் அவற்றில் இரு வகையான குற்றங்களுக்கு இடமுண்டு. தெய்வப் பிரசாதம் பெற்றதாயினும் ஒரு மானுடன் வழியாகத் தானே வந்துள்ளது. மேலும் அதற்கு உரை எழுதியிருப்பவர்கள் மானுடர்கள். கடவுளிடமிருந்து நேராக எந்த சாஸ்திரமும் வந்ததில்லை. ஒரே விஷயத்தை மாத்யூ ஒரு மாதிரி எழுதலாம்; ஜான் மற்றொரு மாதிரி எழுதலாம். ஆனபடியால் புனித நூல்களைச் சாஸ்திரமாக நான் ஒப்புக் கொண்டாலும் என்னுடைய பகுத்தறிவைத் துறக்க முடியாது.

எல்லாவற்றையும்விட முக்கியமான விஷயம் ஒன்றுண்டு. சாஸ்திரங்களின் பொருளே பிரதானம். அதுவே உயிர். சொற்களும் வாக்கியங்களும் அவற்றின் மேல்வாரியான அர்த்தமும் உண்மைப் பொருளை அழித்து விடும். "சொல்லானது கொல்லும்; பொருளானது உயிரைத் தரும்" என்று பைபிளில் காணப்படும் கொரிந்தியனருக்கு எழுதிய நிருபத்தில் பால் முனிவர் சொல்லியிருக்கிறார் அல்லவா?

"இப்படி நான் சொன்ன போதிலும் எல்லாமே பகுத்தறிவைக் கொண்டு முடிவு செய்ய வேண்டும்; பக்திக்கும் நம்பிக்கைக்கும் இடமில்லை என்று நான் சொல்லவில்லை. சில விஷயங்கள் அறிவுக்கு எட்டாதவை. கடவுள் உண்டா இல்லையா என்று முடிவு செய்வதற்குப் பகுத்தறிவுப் பிரமாணம் போதாது. அந்த விஷயத்தில் என்னுடைய நம்பிக்கையையும் பக்தியையும் வாதங்களினால் அசைக்க முடியாது. வொர்ட்ஸ்வொர்த் பாடிய செய்யுள் தெரியுமல்லவா? அதில் ஒரு சிறிய பெண் 'நாங்கள் ஏழு பேர்' என்று இறந்து போனவர்களையும் சேர்த்தே திரும்பத் திரும்பப் பிடிவாதமாகச் சொல்லுகிறாள் அல்லவா? அந்தப் பெண்ணின் பிடிவாதமே என்னுடைய பிடிவாதம். யார் என்ன வாதம் செய்து என்னைக் குழப்பப் பார்த்தாலும் கடவுளின் உண்மையை நான் கைவிட மாட்டேன். ஈசன் இருக்கிறான் என்றே சொல்லுவேன். (ஹரிஜன் 5-12-36)

புஸ்தகம் படிப்பதினின்று ஞானம் வராது. ஞானம் அதுவாகவே நம் உள்ளத்தில் தோன்ற வேண்டும். நூல்களைப் படிப்பது ஓரளவு உதவும். அவ்வளவே. சில சமயம் படிப்பானது ஞானம் உதயமாவதற்குத் தடையாகவும் இருக்கும். (யங் இந்தியா 17-7-24)

திரும்பத் திரும்பச் சொல்லப்படுவதனால் அல்லது எழுதப்படுவதனால் உண்மையில்லாதது உண்மையாகி விடாது. உண்மையை யாரும் காணாததால் அது பொய்யாகிவிடாது. உண்மை எப்போதும் உண்மையே.
(யங் இந்தியா 26-2-25)

பகுத்தறிவுக்காவது மனசாட்சிக்காவது விரோதமான சாஸ்திர வசனத்தை நான் ஒப்புக் கொள்ளமாட்டேன். விவேகத்துக்கு இசைந்த சாஸ்திரப் பிரமாணங்கள் பயன்படும். விவேகத்தைப் புறக்கணிக்கும் சாஸ்திரப் பிரமாணம் பயன் தராது. நம்முடைய உள்ளத்தில் பேசும் மனசாட்சியின் குரலுக்கு விரோதமான சாஸ்திரப் பிரமாணங்களை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். (யங் இந்தியா 8-12-20)



# திசையெல்லாம் போற்றும் இசை மேதை

(சென்ற வாரத் தொடர்ச்சி)

இரண்டாவது உலக மகாயுத்தம் நடந்து கொண்டிருந்த சமயம் பல நாட்டுப் படை வீரர்களும் கேட்டு ரசிக்க யஹூதி மெனுஹின் கச்சேரிகள் செய்தார். இந்தக் கச்சேரிகளின் எண்ணிக்கை ஐந்நூறுக்கும் மேலாகும். போர் முகாம்களிலும் ஆஸ்பத்திரிகளிலும், கப்பல்களிலும் அவரது இசையைச் சிப்பாய்கள் கேட்டு மகிழ்ந்தனர். துணைக்கு யாருமின்றி இன்னிசை நிகழ்த்துவதற்கெனப் போர்க்களங்களுக்குப் பல தடவை மெனுஹின் குண்டு வீசும் போர் விமானங்களில் பறந்து சென்றதுண்டு. அவரது யுத்தகாலச் சேவையைக் கண்டு மகிழ்ந்த ஜெனரல் டிகாலிடமிருந்து லீஜன் ஆஃப் ஹானர் (Legion of Honour) என்ற பிரஞ்சு நாட்டின் உயர்ந்த பட்டத்தைப் பெற்றார் மெனுஹின்.

அழைப்பின் பேரில் ரஷ்யா சென்று கச்சேரி நடத்திய முதல் அமெரிக்க இசைக் கலைஞர் மெனுஹினே. மாஸ்கோவில் நடந்த அவரது கச்சேரிக்கு டிக்கட்டு வாங்க, ருஷ்ய மக்கள், பன்னிரண்டு மணி நேரம் 'க்யூ'வில் நின்றனர்!

1952ம் ஆண்டு நேருஜியின் அழைப்பின் பேரில் பாரதத்துக்கு விஜயம் செய்த மெனுஹின் அளித்த இசை விருந்து, பிரதமரின் 'நிவாரண நிதி'க்கு மூன்று இலட்சம் ரூபாய் திரட்டி அளித்தது. தொடர்ந்து 1954, 1964ம் ஆண்டுகளில் பாரதத்துக்கு அவர் விஜயம் செய்துள்ளார்.

உலகத்தில் மெனுஹினின் இசை நிகழ்ச்சி நடைபெறாத நாடு செஞ்சீனா ஒன்றுதான். செஞ்சிலுவைச் சங்க நிதி, ருஷ்ய யுத்த நிவாரண நிதி, சிறு நிதி முதலிய பல தர்ம நிதிகளுக்கென மெனுஹின் கச்சேரி செய்து உதவியதுண்டு. அவரது இசையைக் கேட்டு மகிழ்ந்த விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் அவரைத் தழுவி அவரது இசையில் தாம் கடவுளைக் கண்டதாகக் கூறினார்.

ஸ்விட்ஜர்லாந்தில் ரயிலில் ஜெனிவாவுக்குப் பிரயாணம் செய்து கொண்டிருந்தார் மெனுஹின். ரயில் மாற வேண்டிய ஒரு சந்திப்பில் அவரது சாமான்களையும், வயலினையும் எடுத்து வந்த போர்ட்டர் வருமுன் ரயில் கிளம்பியதால், மெனுஹின் அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுக்க நேர்ந்தது. தக்க காரணமின்றி இப்படிச் செய்வோருக்கு அந்த நாட்டில் சிறைத் தண்டனை உண்டு. ரயில் நின்றவுடன் வந்த போலீசார் அன்று இரவு ஜெனிவாவில் அவரது கச்சேரி இருந்ததை முன்னிட்டு, அவருக்கு ஐம்பது பிராங்குகள் அபராதம் மட்டும் விதித்தனர். ஆனால் ரயில் கிளம்பியவுடன் மெனுஹினின் இசையைக் கேட்டு மகிழ்ந்திருந்த போலீஸ் அதிகாரி அவரிடம் வந்து, அவர் செலுத்திய அபராதத் தொகையில் பாதியைத் திருப்பிக் கொடுத்து விட்டார். "ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுத்தது குற்றம்தானே?" என்று கேட்டார் மெனுஹின். "அது சரி, ஆனால் நீங்கள் அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுத்திராவிட்டால்

இன்று மாலை உங்கள் வயலின் கச்சேரி ஜெனிவாவில் நடைபெறாமல் போய்விட்டிருக்குமே!'' என்றார் போலீஸ் அதிகாரி.

மற்றொரு சமயம் வடக்கு ஆப்பிரிக்காவில் கச்சேரி நடக்க வேண்டிய ஓர் ஊருக்குப் போகும் வழியில் ஆற்று வெள்ளம் காரணமாக அவரது பயணம் தடைப்பட்டது. ஆற்றில் பாலம் இல்லை. ஆற்றுப் படுகை மீதே சாலை. மோட்டாரில் உள்ள பிரயாணி இசை மேதை மெனுஹின் என்பதை அறிந்ததும் அக்கம்பக்கத்திலிருந்த மக்கள் மெனுஹினை மோட்டார் காரோடு தூக்கி, ஆற்றைக் கடப்பதற்கு உதவியாக வந்த பெரிய லாரி ஒன்றின் மீது வைத்து விட்டார்கள்! காரைச் சுமந்தபடி அந்தப் பெரிய லாரி ஆற்றை எளிதாகக் கடந்து விட்டது.

மேல்நாட்டு இசையைப் போன்று ஹிந்துஸ்தானி சாஸ்திரீய சங்கீதத்தையும் ரவிசங்கரிடமிருந்து அறிந்திருக்கும் மெனுஹின் வயலினில் சில ராகங்களைத் தனியாகவும், ரவிசங்கருடன் சேர்ந்தும் வாசித்திருக்கிறார். இந்த ராகங்கள் அடங்கிய இசைத்தட்டு வெளிவந்த முதல் வாரத்திலேயே 15,000க்கு மேல் விற்பனையாயிற்று.

வயலின் மேதையாகவும், சிறந்த வாத்திய கோஷ்டி நடத்துனராகவும் (Conductor) விளங்கும் மெனுஹினுக்குக் கிடைத்திருக்கும் பட்டங்களும், பரிசுகளும் அநேகம். பிரிட்டிஷ் அரசாங்கம் ''ஸர்'' என்ற பட்டத்தை அளித்து அவரைக் கௌரவித்தது. ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் முதலிய எட்டு சர்வகலாசாலைகள் அவருக்குக் கௌரவப் பட்டங்கள் அளித்துப் பெருமைப்படுத்தியுள்ளன.

தற்சமயம் லண்டனில் வசித்து வரும் மெனுஹின் பிரிட்டனின் ஸர்ரே (Surrey) பகுதியில், கடந்த 1963ம் ஆண்டு இசைப் பள்ளி ஒன்றை நிறுவியிருக்கிறார். இதில் சேருவது எளிதல்ல. தற்போது சுமார் முப்பது முப்பத்தைந்து பேர்களே இங்கு பயிலுகிறார்கள். நுணுகி ஆராய்ந்து அதிக இசை ஞானம் உள்ளவர்கள் என்று தெரிந்த பிறகே சேர்த்துக் கொள்கிறார்கள். ஏழு முதல் பதினேழு வயது வரை உள்ளவர்கள் இங்கு பயில்கிறார்கள்.

இசையை அடுத்து யோகாசனப் பயிற்சியில் தான் மெனுஹினுக்கு ஆர்வம் அதிகம். தமது உடல் நலத்துக்கும், மன அமைதிக்கும், வயலின் இசையில் தமது திறமைக்கும் காரணம் யோகாசனப் பயிற்சியே என்பது அவரது திடமான கருத்து. பல ஆண்டுகளுக்குமுன் நியூஸிலாந்து விமான நிலையமொன்றில் விமானத்துக்குக் காத்திருக்கும் போது யோகாசனம் பற்றிய ஒரு புத்தகத்தின் சில பகுதிகளைப் பொழுதுபோக்காகப் படிக்க நேர்ந்தது. மறுநாள் அதில் கூறியிருந்த சில பயிற்சிகளைச் செய்து பார்த்தார் மெனுஹின்; தொடர்ந்து செய்தார். அவர் உடல் நிலையிலும், மன நிலையிலும் சில போற்றத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டன. இதையடுத்துப் பாரதத்துக்கு வந்திருந்த போது மெனுஹினுக்கு பம்பாயில் பிரபல யோகாசன ஆசிரியர் பி. கே. எஸ். அய்யங்கார் அவர்களைச் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது. யோகாசனப் பாடங்களைத் திரு அய்யங்காரிடம் பயிலத் தொடங்கிய மெனுஹின் அவரைத் தம்முடன் ஸ்விட்ஜர்லாந்துக்கு அழைத்துச் சென்று தீவிர ஆசனப் பயிற்சியில் இறங்கினார். பாரதம் வந்திருந்த மெனுஹின் முதன் முதலில் நேருஜியைச் சந்தித்த போது அவர்கள் இருவரும் சேர்ந்து தலைகீழாக நின்று சிரசாஸனம் செய்ததாகக் கூறப்படுகிறது. யோகாசன அறிவைத் தமக்களித்து உதவிய திரு அய்யங்காருக்குக் குருதட்சிணையாக, ''என் சிறந்த வயலின் ஆசிரியர் பி. கே. எஸ். அய்யங்காருக்கு அன்



படங்கள் :

வாத்தியக் கோஷ்டியை இயக்கும் யஹூடி மெனுஹின்

ரவிசங்கர் - மெனுஹின் இசைத்தட்டின் உறை

சிரசாசனம் செய்யும் மெனுஹின்



ஜனார்த்தனன்

# கீதைக் கதைகள்



''அதனுடன் சேர்ந்து என்னுடைய பாவனையை உடைக்க முடியாது. பக்தியின் பாவனையினால், உடைந்த ஒவ்வொரு துணுக்கிலும் என்னால் அரனைத் தரிசிக்க முடிகிறதே....''

## 15. வினை

அரனெறிசார்ந்த பக்தன் சிவலிங்க பூஜையில் ஈடுபட்டிருந்தான். வந்த சிந்தனை சீலனுக்கு அவனுடைய செயல் பகுத்தறிவுக்கு ஒவ்வாததாகத் தோன்றியது.

'விக்கிரஹ வழிபாடு பகுத்தறிவுக்குப் புறம்பானது. எனவே, அது மூடத்தனம் சார்ந்தது' என்றான் சிந்தனைசீலன்.

'பகுத்தறிவு என நீ சொல்வது உன் அறிவின் தளத்தைப் பொறுத்ததுதானே? அதற்குள் விக்கிரஹ வழிபாட்டின் மகத்துவம் சிக்குப்படவில்லையென்றால், அஃது உன் அறிவின் எல்லைக் கட்டினையே காட்டுகின்றது. பக்திமயமான பாவனையுடன் இச்சிலையை நோக்கு. அப்பொழுது என் வழிபாட்டின் மகத்துவம் விளங்கும்' என்றான் பக்தன்.

'அஞ்ஞான ஆசாரங்களிலும், சடங்குகளிலும் நம்பிக்கை வைத்திருக்கும் அறிவிலியாகிய நீ, என் அறிவு நிலையை எடைபோடுதல் அடாது. இச்சிலையிலே வணக்கத்திற்கேற்ற கலைத்தன்மைதானும் கிடையாது. கோரமாகக் காட்சி தருகிறது...'

'முதல்வன் கொண்ட திருமேனிகளிற் சில திருமேனி போக வடிவமும், சில திருமேனி கோரவடிவமும், சில திருமேனி யோக வடிவமும் கொண்டவை. முறையே, உயிர்கட்குப் போகம் புரிதற்பொருட்டும், வினையினை வீட்டுதற் பொருட்டும், யோக முத்தி உதவுதற்பொருட்டுமாம். இத் தத்துவத்தை நீ அறிவாயோ?'

'நெட்டுருப் போட்டு வைத்திருக்கும் எதனையோ சொல்லி என்னை மருட்டப் பார்க்கின்றாய். இஃது இந்த உருவில் வடித்தெடுக்கப்படுவதற்கு முன்னர் என்னவாக இருந்தது?'

'வெறும் கல்லாக இருந்தது....'

'சிற்பியின் கைவண்ணந்தானே இதனைச் சிலையாக்கியது? சிலையானதும் இது வணக்கத்திற்குரிய தெய்விகப் பொருளாகிவிட்டது. அப்படியானால் நீ மனிதனுடைய கலையாற்றலைத்தானே தெய்வமென்று வணங்குகின்றாய்?'

'நீ பேசுவது உருவம் பற்றியது. இது கல்லாக இருந்தது. சிலையாக மாறிய பிறகும் கல்லேதான்! கல்லின் இன்னொரு வகை உருவம் என்று வைத்துக் கொள்ளலாம். தெய்வம் என்று வணங்கும் பாவனையை இதிலே இணைக்கும்பொழுதுதான் சிலையின் தெய்வத்தன்மை உயிர்ப்புப் பெற்றது. இதுவே பக்தியின் மகத்துவம்...'

'பக்தி என்றால் என்ன?'

'உள்ளங் கலத்தல் என்னும் யுக்தி...'

'யுக்தியா? உன் யுக்தியின் மூலமோ, அன்றேல் பக்தியின் மூலமோ இதிலுள்ள தெய்வத்தைக் காட்டேன்' எனக் கூறிய சிந்தனைசீலன் சிவலிங்கத்தைக் கீழே போட்டு உடைத்தான்.

'நீ உடைத்தது கல்லைத்தானே? அதனுடன் சேர்ந்து என்னுடைய பாவனையை உன்னால் உடைக்க முடியாது. என் பக்தியின் பாவனையினால் உடைந்த ஒவ்வொரு துணுக்கிலுமே என்னால் அரனைத் தரிசிக்க முடிகின்றதே...' என்றான் பக்தன் மேலும் அழுத்தமான நம்பிக்கையுடன்.

சிந்தனைசீலன் மௌனியானான்!

- எஸ். பொன்னுத்துரை

---

பளிப்பு'' என்று பொறிக்கப்பட்ட விலை உயர்ந்த ஒமேகா கைக் கடிகாரம் ஒன்றைப் பரிசாக அளித்திருக்கிறார். தவிர யோகாசனம் பற்றிய விரிவான புத்தகம் ஒன்றை எழுதும்படி அய்யங்காரை உற்சாகப்படுத்தி அப்புத்தகத்துக்கான முன்னுரையைத் தாமே எழுதிப் பெருமை சேர்த்தார்.

கடவுள் கொடுத்திருக்கும் உணவை இயற்கை நிலையில் உண்பதே நலம் என்பது மெனுஹினின் கருத்து. ஆகவே, அவர் செயற்கை முறையில் சுத்திகரிக்கப்பட்ட சர்க்கரையையும், ரசாயன உரங்களின் மூலம் வளர்ந்த உணவுகளையும், முன்னதாகச் சமைத்து டப்பாக்களில் அடைக்கப்பட்ட பண்டங்களையும் உண்பதில்லை. கல் இயந்திரத்தில் அரைக்கப்பட்ட மாவினால் ஆன ரொட்டியைத்தான் அவர் உபயோகிப்பது வழக்கம்.

சில ஆண்டுகளுக்குமுன் நடந்த ஒரு சம்பவம், மெனுஹினின் வாழ்க்கைத் தத்துவத்தை விளக்குவதாக உள்ளது. கச்சேரிக்கென நியூயார்க்கிலிருந்து லண்டனுக்குப் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது அவர் விமானம் மூடுபனி காரணமாக அயர்லாந்தின் ஷானன் விமான நிலையத்திலிருந்து கிளம்பத் தாமதமாயிற்று. கச்சேரி தொடங்குவதற்கு மூன்று மணி நேரம் இருந்தது. சற்றும் கலக்கமடையாமல் விமான நிலையத்திலேயே அமைதியாக வயலின் சாதகம் செய்யத் தொடங்கினார் மெனுஹின். காலதாமதமாய்க் கிளம்பிய விமானம் அதே மூடுபனி காரணமாக லண்டனில் இறங்காமல் எழுபது மைல் தொலைவில் உள்ள மான்ஸ்டன் விமான நிலையத்தில் இறங்கியது. அங்கிருந்து மோட்டார்கார் மூலம் கச்சேரி நடக்க வேண்டிய இடத்துக்கு ஒரு மணி நேரம் தாமதமாக வந்து சேர்ந்தார் மெனுஹின். அவர் வயலின் இசையைக் கேட்பதற்குச் சபையில் ஆறாயிரம் ரசிகர்கள் பொறுமையுடன் காத்திருந்தனர். கச்சேரி முடிந்தவுடன் எதிர்பாராதவிதமாக அவருக்குச் சிரமம் ஏற்பட்டது பற்றிச் சிலர் பேசினார்கள். மெனுஹின் அப்போது ஒரு ஹிந்து மத வேதாந்தியைப் போல், ''நடப்பது நடந்தே தீரும். எதையும் சந்தோஷமாக ஏற்று அனுபவிக்க வேண்டும்'' என்றார்.




யூ. ஏ. ஏ. நாடகக் குழுவினர் ''இம்பெர்ஃபெக்ட் மர்டர்'' (Imperfect Murder) என்று ஒரு நாடகத்தை அரங்கேற்றினார்கள். அது குறையே சொல்ல முடியாதபடி பர்ஃபெக்ட் (Perfect) டாக இருந்தது. இப்போது, ஃப்ளைட்-172 (Flight - 172) என்ற நாடகத்தை அரங்கேற்றி யுள்ளார்கள். இந் நாடகத்தில் வரும் விமானம் இலேசில் கிளம்ப மாட்டேனென்கிறது. விமானம் மட்டுமில்லை, நாடகமே அப்படித்தான்! ஒருவேளை 'பறக்காத விமானம்' என்று தலைப்புக் கொடுத்திருந்தால் நாடகம் 'ஜிவ்'வென்று உயர்ந்திருக்குமோ என்னவோ?

நாடகம் தொய்ந்து போவதற்கான காரணத்தைக் கண்டுபிடிப்பது கஷ்டமில்லை. கதை இல்லாத குறை. நகைச்சுவைத் துணுக்குகள்; மேலும் சில ஹாஸ்ய வெடிகள்; இன்னும் கொஞ்சம் ஜோக்குகள்; போனஸாக மேற்கொண்டு சிரிப்புத் துணுக்குகள் என்று இப்படியாகச் சிரிப்பு வளர்கிறது; நாடகம் வளரவில்லை!

சும்மா சொல்லக் கூடாது; மௌலியின் வசனங்களில் கடன் வாங்கிய ஹாஸ்யம் அதிகமில்லை. அதைப் பாராட்டத்தான் வேண்டும். பழைய பத்திரிகைகளிலிருந்து எடுத்துக் கையாளப்பட்ட ஹாஸ்யம் தப்பித் தவறி ஏதோ ஒன்றிரண்டு இருக்கலாம்; அவ்வளவுதான். 'ஒரிஜினல் ஜோக்ஸ்' ஏராளம்.

'ஸ்டாப் வாட்ச்' வைத்துக் கணக்குப் பண்ணியிருந்தால் இரண்டரை மணி நேர நாடகத்தில் குறைந்தது ஒன்றரை மணி நேரமாவது அகாடமி ஹாலில் சிரிப்பொலி கேட்டுக் கொண்டிருந்தது என்பது உறுதிப்பட்டிருக்கும். ஆனால் ஒன்று. அன்று பிரும்மகான சபை 'ஏ குரூப்' அங்கத்தினர்கள் நகைச்சுவையை அனுபவித்தும் சிரித்தார்கள்; ஓரிரு இடங்களில் 'ஐயோ! இதுவும் நகைச்சுவையா?' என்று கேட்கும் விதமாகவும் சிரிப்பாய்ச் சிரித்தார்கள்.

நாடகத்தினை நுணுகிப் பார்க்கும் கண்களுக்கு ரசிக்கும்படியான விஷயங்கள் பல இருந்தன. இவற்றில் முக்கியமானது கோ-ஆர்டினேஷன் (Co-Ordination). எந்த நாடகத்துக்கும் மெருகு ஏற்றுவது இந்த அம்சம்தான். நடிகர்கள் ஒருவரோடு ஒருவர் மட்டுமின்றி, நடிகர்களும் வாத்திய இசையும், நடிகர்களும் ஒளி அமைப்பும் எல்லாம் ஒன்றோடொன்று பொருத்தமாக இணைந்து அனுசரித்துப்போக வேண்டும். இது மிக இயற்கையாக இலகுவாக நடப்பது போலும் தோன்ற வேண்டும். யூ. ஏ. ஏ. குழுவினர் இதில் முழு வெற்றி கண்டிருந்தனர். சான்று — கண்டு மகேந்திரா டிரம் வாசித்தல்; மூக்குக் கண்ணாடி இல்லாததால் ஆள் மாறியது அறியாது பேசிக் கொண்டிருத்தல்; ஏ. ஆர். எஸ். 'ஹியரிங் எய்ட்'டை அணைத்துவிட மற்றவர்களின் வாய் அசைவு மட்டும் அவையோருக்குத் தெரிதல்.

ஆரம்பத்தில் விமான உபசரிணைப் பெண் பார்வையாளர்களை விமானத்தில் பயணம் செய்ய அழைப்பது போல் நாடகத்தையும் தயாரிப்பாளர், டைரக்டர் முதலானோரையும் அறிமுகப்படுத்துவது மிக நல்ல யுக்தி.

# கிளம்பாத விமானம்!

விமானத்தில் பறக்கவிருக்கும் பிரயாணிகளுள் ஒரே ஒருவரை மட்டும் யாதொன்றும் பேசாமல் கடைசிவரை சும்மா உட்கார வைத்திருக்கிறார்கள். பல்வேறு மனிதர்களின் குண இயல்புகளைச் சித்திரிக்கும்போது இப்படியும் ஒரு மனிதரை அமர வைத்திருப்பது அபூர்வமாகவே தோன்றக்கூடிய நல்ல யோசனை.

பரிசு பெற்ற லாட்டரி டிக்கெட்டை ஏ. ஆர். எஸ். கிழித்துப் போடுவது பிரசாரம்தான் என்றாலும் வரவேற்கப்பட வேண்டியதே!

ஒய். ஜி. பி.; ஏ. ஆர். எஸ். ஆகியோர் டைரக்ஷன் ஏ. ஒன்.

விமான நிலையத்தில் விமானம் புறப்படக் காத்திருக்கும் பலர் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்வதை வைத்தே நாடகத்தை நடத்தி முடித்து விடுகின்றனர். நடிப்பு, டைரக்ஷன், மேடை நிர்வாகம், நகைச்சுவை போன்ற எல்லாம் நல்லபடியாக இருந்தும் கதை இல்லையே? 'உடலில் எல்லாமே சரியாகத்தான் இருக்கின்றன; ஒரு குறையும் இல்லை — ஹார்ட் மட்டும்தான் வீக்' என்பது போலத்தான்!

பென்னட் ஸெர்ஃப் எழுதிய ''1001 ஜோக்குகள்'' என்ற புத்தகத்தை ஆரம்ப முதல் கடைசி வரை ஒரே மூச்சில் படித்து ரசிக்கக் கூடியவர்களுக்கு இந்த நாடகமும் ரொம்ப ரொம்பப் பிடிக்கும். ஸாரி, இந்த விமரிசகர் அந்த ரகத்தைச் சேர்ந்தவரில்லை.

— குட்டி கிருஷ்ணன்



# போராட்டங்கள்



## 15. கட்சிக்குள் நடந்த சதி

இரவில் 'பாரதமணி'ப் பத்திரிகைக் கட்டடத்தில் உதவி ஆசிரியர்கள் சுறுசுறுப்புடன் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தனர். முரளி, தலையங்கம் எழுதுவதில் ஈடுபட்டிருந்தான். அவனுக்கு எதிரே சுவரில் மாட்டப்பட்டிருந்த கடிகாரம் எட்டு முறை மணியடித்தது. அறைக் கதவைத் திறந்து கொண்டு சாமிநாதன் பரபரப்புடன் உள்ளே வந்தான்.

''நம்முடைய எல்லைப் பகுதிக்குள் சீனர்கள் ரோடு போட்டிருப்பதாக வதந்தி பரவியிருக்கிறது'' என்றான் படபடப்புடன்.

''எங்கிருந்து வந்த செய்தி?'' என்று கேட்டான் முரளி.

''தில்லியிலிருந்து. பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் 'லாபி'யில் இது பற்றிப் பேசுகிறார்களாம். நாளை, பார்லிமெண்டில் கேள்வி வரலாமாம்'' என்றான் சாமிநாதன்.

முரளி சிறிது நேரம் மௌனமா யிருந்தான். எதைப் பற்றியோ சிந்தனையில் ஆழ்ந்தான்.

''இந்த விஷயத்தை அரசாங்கம், மக்களிடமிருந்து மறைத்து விட்டதாம்'' என்றான் சாமிநாதன்.

முரளி பதில் ஏதும் கூறாமல் தலையை மட்டும் வெறுப்புடன் அசைத்தான். அவனுடைய முகத்தில் கவலையின் சாயல் படிந்திருந்தது.

''திபெத்தை விழுங்கி விட்டது. இனி இந்தியா மீது கை வைக்குமோ என்னவோ? நம்முடைய பிரதமர் இதை எப்படிச் சமாளிப்பாரோ...? இன்று இரவு விமானத்தில் தில்லிக்குப் போகிறாயா?'' என்று கேட்டான் முரளி.

''நானா...?'' — சாமிநாதன் திகைப்புடன் கேட்டான்.

''ஆமாம். நாளை பார்லிமெண்டில் நடப்பவைகளைப் பற்றி ரிப்போர்ட் அனுப்பு.... பிளேனுக்கு உடனே டிக்கெட் 'புக்' பண்ணு....போ...'' என்றான் முரளி.

சாமிநாதன் சென்றதும் சற்று நேரத்தில் சிவராமன் அங்கே வந்தான். இரவில் அந்த நேரத்தில் அவனை முரளி எதிர்பார்க்கவில்லை யாதலால் திகைப்புடன் அவனைப் பார்த்தான்.

''உன்னிடம் ஓர் உதவியை நாடி வந்திருக்கிறேன். தட்டாமல் செய்ய வேண்டும்'' என்றான் சிவராமன். அவனுடைய முகத்தில் தோன்றியிருந்த கவலையையும் மன உளைச்சலையும் முரளி உணர்ந்து கொண்டான். மிகுந்த பரிவோடு சிவராமனைப் பார்த்தான்.

''உன்னுடைய திருபர், இன்று நடந்த பல விஷயங்களை ஃபோட்டோ எடுத்திருக்கிறாராம்.''

''உனக்கு யார் சொன்னது?''

''சாரதா சொன்னாள்.''

''சாரதாவா...? அவளுக்கு எப்படித் தெரியும்?'' என்று வியப்புடன் கேட்டான் முரளி.

''திருபரே சொன்னாராம்.''

''அந்தப் படங்கள் உனக்கு வேண்டுமா?'' என்று கேட்டுக் கொண்டே ஃபோனைக் கையில் எடுத்தான் முரளி.

''படத்தைக் கேட்க வரவில்லை. அந்தப் படங்களை நீ 'பாரதமணி'யில் அச்சிடக் கூடாது.... இந்த உதவி செய்தால் போதும்'' என்றான், சிவராமன்.

முரளி சிரித்தான். ஃபோனைக் கீழே வைத்தான். பிறகு சொன்னான்:

''கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவன் ஒருவன் இப்படி வந்து கெஞ்சிக் கேட்பது அதிசயம்தான். அன்று 'பாரதமணி' மேல் கல்லெறிந்தது மாதிரி, இன்றும் உன்னுடைய தோழர்களை ஏவிவிட்டால் இந்தக் கட்டடத்துக்குள்ளேயே நுழைந்து நீ கேட்கும் போட்டோக்களைப் பறித்துக்கொண்டு போய்விடலாமே? இந்த மாதிரி நீ இவ்வளவு தூரம் இரவில் வந்து வேண்டுகோள் விட வேண்டிய அவசியம் இல்லையே?''

சிவராமனின் முகம் கன்றி விட்டது.

''அன்று நடந்தது என்னுடைய தூண்டுதல் என்கிறாயா, முரளி?''

ர.சு.நல்லபெருமாள்

''அதைப் பற்றி நான் எதுவும் சொல்லத் தயாரில்லை. கல்லெறிந்தவர்கள் கம்யூனிஸ்டுகள்'' என்றான் முரளி, திடமாக.

''அது உண்மைதான். ஆனால் நான் தூண்டவில்லை...என்னை நீ நம்பலாம்.''

''ஓ...! தலைவனுக்குத் தெரியாமல் தொண்டர்களே புரட்சியில் இறங்கி விட்டார்களாக்கும்... நீதானே இந்த மாநிலத்துக்குத் தலைவன்?''

''மன்னித்துக்கொள், முரளி! அன்று நடந்த சம்பவத்தை மறந்துவிடு. எனக்குத் தெரியாமலே காரியம் நடந்துவிட்டது. இனி அப்படி நடக்காது. உறுதி தருகிறேன்.''

''உன்னைப் பார்க்கப் பரிதாபமாக இருக்கிறது, சிவராம்! இப்படிப்பட்ட ஒரு கட்சியில் சேர்ந்து பைத்தியமாகிக் கொண்டிருக்கிறாய்.''

''அது என் லட்சியம்..... கட்சியில் பலதரப்பட்டவர்கள் இருப்பார்கள். பல விஷயங்கள் நடந்துவிடும்.''

''எது நடந்தாலும் தலைவன்தான் பொறுப்பு'' என்றான் முரளி.

''அதைத்தான் ஒப்புக் கொண்டு உன்னிடம் மன்னிப்பும் கேட்டு விட்டேன். இனி அந்த மாதிரி நடக்காது என்று உறுதியும் கொடுத்து விட்டேன். பிறகென்ன...?''

முரளி எழுந்து சிவராமனின் பக்கத்தில் வந்தான். சிவராமனின் தோளில் கையை வைத்து அழுத்தினான். ''கோபப்படாதே சிவராம்!... எனக்குத் தோன்றியதைச் சொன்னேன். கேட்பதும் கேட்காததும் உன் இஷ்டம். ஆனால் நண்பன் என்கிற முறையில் சொல்லவேண்டியதைச் சொல்லித்தான் திரு




சிறகடிக்கும் சேலைகள்...
கற்பனைச் சிறகடிக்கும் டிசைனும் அற்
புத வண்ணமும் கூடிக் கலந்த காட்டன்
சேலைகள். நேற்றைய பவிசும் நாளைய
மவுசும் இரண்டற இணைந்த எழிற்கோர்-
வை. காலைமுதல் மாலை வரை கட்டி
மகிழ்வதற்கேற்ற சுசங்காப் பொலிவுப்
படைப்பு அணிவதோர் நளினம்—அதன்
சலவையோ சுலபம்- டாடா டெக்ஸ்
டைல்களின் வாயில்கள்.
மோஹினி, ஹஸீனு, மெய்ட் ஆஃப் தி
மிஸ்ட் இன்னும் வண்ணப் பேரணியில்
பிடித்ததை வாங்கி அணிவீர்
TATA Textiles
ULKA TF 124 Tam

வேன்'' என்றான். பிறகு சிவராமனுக்கு எதிரே மேஜையின் விளிம்பில் அமர்ந்து கொண்டான்.

''நானும் நண்பன் என்கிற முறையில்தான் உன் நன்மையைக் கருதி இங்கே வந்திருக்கிறேன்'' என்றான் சிவராமன்.

''படத்தை நான் அச்சிடாமல் இருப்பது என்னுடைய நன்மைக்காகவா?'' வியப்புடன் கேட்டான் முரளி.

''நீ அச்சிட்டால் கட்சித் தொண்டர்களுக்குக் கோபம் வரும்.''

''ஓஹோ.... தொண்டர்களுக்குக் கோபம் வந்து தலைவரைக் கூட லட்சியம் செய்யாமல் புரட்சி செய்யத் துணிந்து விடுவார்களோ...? சிவராமன், இந்த மாதிரிப் பயமுறுத்தல்களுக்கு நான் பயந்து விடுவேன் என்று நினைக்கிறாயா?''

''நீ பயப்படுவாய் என்று சொல்லவில்லை, முரளி. என்னை இக்கட்டான நிலையில் வைத்துவிடாதே என்றுதான் சொல்லுகிறேன். நீ வேறு நபராயிருந்தால், நான் கவலைப்பட மாட்டேன். எதை எழுதினாலும் நான் அக்கறை கொள்ள மாட்டேன்.''

''உனக்கு ஓர் இலட்சியம் இருப்பது போல் எனக்கும் ஓர் இலட்சியம் உண்டு. கம்யூனிஸ்ட் கட்சிதான் உனக்குக் கடவுள் என்றால், எனக்கு அது சைத்தான். அதை எதிர்த்துக் கொண்டுதான் இருப்பேன்'' என்றான் முரளி அழுத்தமாக.

''அது உன் இஷ்டம். இப்போது இந்தப் படங்களைப் பிரசுரிக்க வேண்டாம்.''

''உண்மையை மக்களுக்குக் கூறுவது பத்திரிகை தர்மம். அதிலிருந்து விலக முடியாது.''

''நன்மைக்காக உண்மையை மறைக்கவும் செய்யலாமே! படங்களை அச்சிட்டு அதனால் இன்னும் குழப்பமும் கொந்தளிப்பும் ஊரில் ஏற்படுமானால்..''

''கொந்தளிப்பு கம்யூனிஸத்துக்கு எதிராகக் கிளம்புமானால் நல்லது தானே?''

''நேரில் வந்து சொன்னால் கேட்பாய் என்று நம்பிக் கொண்டுதான் வந்தேன். சரி, உன் இஷ்டம்'' என்று சலிப்படைந்தவனாய் எழுந்து நின்றான் சிவராமன்.

''நீ இப்படிக் கட்சிக்குள் மாட்டிக் கொண்டு அவதிப் படுவது போதாதென்று சாரதாவையும் உள்ளே இழுத்து விட்டாயே?'' என்றான் முரளி.

''நான் இழுப்பதற்கு அவளென்ன விவரம் தெரியாத குழந்தையா? அவளுடைய சிந்தனைக்கு எந்தத் தத்துவம் ஏற்கிறதோ அந்தப் பாதையில் வருகிறாள். உனக்கு ஒருவனுக்குத்தான் சிந்திக்கத் தெரியும் என்று நினைத்தாயோ?'' என்று அலட்சியமாகக் கேட்டு விட்டு அந்த அறையை விட்டு வெளியேறினான் சிவராமன்.

முரளி போனை எடுத்து உதவி ஆசிரியர்களின் அறையிலிருந்த முருகானந்தத்தோடு பேசினான்.

''பேஜ் மேக்கப் ஆகிவிட்டதா?'' — முரளி கேட்டான்.

''அதுதான் நடந்து கொண்டிருக்கிறது. இன்னும் அரை மணி நேரத்தில் முடிந்து விடும்'' என்று பதில் சொன்னார் முருகானந்தம்.

''கம்யூனிஸ்ட் கட்சி சம்பந்தமாக எடுத்த படங்களைப் பிரசுரிக்க வேண்டாம்.''

''பிளாக் எடுத்து முதல் பக்கத்தில் சேர்த்தாகி விட்டதே...''

''பரவாயில்லை. அதை எடுத்து விடுங்கள்.''

''சரி, சார்.''

''சாமிநாதனை இங்கு வரச் சொல்லுங்கள்.''

''சரி சார்.''

சிறிது நேரத்தில் முரளியின் அறைக்கு வந்தான் சாமிநாதன்.

''டில்லிக்கு ஸீட் இருக்கிறதா?'' — முரளி கேட்டான்.

''புக் பண்ணிவிட்டேன். விமான நிலயத்துக்குத்தான் புறப்பட்டுக் கொண்டிருந்தேன். படங்களைப் போட வேண்டாம் என்று சொல்லிவிட்டீர்களாம்'' என்றான். அவன் குரலில் மகிழ்ச்சி தெரிந்தது. தொடர்ந்து பேசினான்: ''நாங்களும் அப்படித்தான் சார் நினைத்தோம். படங்களைப் போட்டு விட்டால் பிறகு கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்கள் கோபத்தில் எதையாவது செய்து விடக் கூடாது, பாருங்கள். நீங்கள் பயந்ததும் சரிதான் சார்...''

''ஷட் அப்... நான் பயந்துபோய்ப் போட வேண்டாம் என்று சொல்லவில்லை'' என்று இரைந்தான் முரளி.

சாமிநாதன் நடுங்கிப் போய் முரளியை வெறிக்கப் பார்த்தான்.

''நீ படம் எடுத்தால், ஊர் முழுதும் தம்பட்டம் அடிக்க வேண்டுமா?'' என்று கோபத்துடன் கேட்டான் முரளி.

''அப்படி ஒன்றும் நான் செய்யவில்லையே, சார்.''

''சாரதாவிடம் நீதானே சொன்னாய்?''

''கூட்டத்துக்குப் போயிருந்தபோது அவர்களைக் கண்டேன். பேச்சுவாக்கில்....''

''அதனால் வந்த வினைதான் இது... இல்லையென்றால் இத்தனை படங்களை



மாப்பிள்ளை : உங்க அப்பா புதுசா போர்டிங் அண்ட் லாட்ஜிங் ஆரம்பிச்சிருக்கிறாரா, என்ன ?

மனைவி : ஆரம்பிக்கலாமான்னு யோசனை பண்ணிக்கிட்டிருக்கார்! அது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?

மாப்பிள்ளை : படுக்கை அறையில் படுப்பதானால் பத்து ரூபாய், திண்ணையில் படுப்பதானால் மூன்று ரூபாய்ன்னு என்னிடம் சொன்னார்!

யும் பத்திரிகையில் போட்டிருக்கலாம். உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போக வேண்டியதுதானே. எதிரே கண்டவர்களிடமெல்லாம் படம் எடுத்ததைப் பற்றிப் பறைசாற்ற வேண்டுமா?''

''உங்களுக்கு வேண்டியவர்களாயிற்றே என்றுதான் நம்பிக்கையோடு சொன்னேன்'' என்று கூறிவிட்டு, முரளியை உற்றுப் பார்த்தான். முரளிக்குச் சுருக்கென்று இதயத்தில் தைத்தது.

''சரி சரி போ... சீக்கிரம் ஏரோட்ரோமுக்குப் புறப்படு'' என்று எரிந்து விழுந்தான் முரளி.

சாமிநாதன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டே வெளியேறினான். சிறிது நேரம் கழித்து முரளி வராந்தாவுக்கு வந்தபோது பக்கத்து அறையில் சாமிநாதன் கூறிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது.

''ஆசிரியருக்கும் படங்களைப் போடுவதில் நம்மைப் போல் பயந்தான். ஆனால் பயத்தைக் காட்டிக் கொள்ளாமல் காரணத்தை யார் மீதோ சுமத்துகிறார்'' என்று கூறிவிட்டு இலேசாகச் சிரித்தான் சாமிநாதன். பிறகு கையில் ஒரு சிறு பெட்டியுடன் வராந்தாவுக்கு வந்தான்.

அவன் சொன்னதைக் கேட்டு முரளி, தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டு, வராந்தாவில் நின்று கொண்டிருந்தான். முரளியைக் கண்டதும் சாமிநாதன் முகத்தில் அசடு தட்டியது.

''இல்லிங்கோ போய் இந்த மாதிரி விமர்சனம் செய்து கொண்டிராதே. வாயை மூடிக் கொண்டு, கண்ணையும் காதையும் மட்டும் திறந்து வைத்துக் கொள்... வா வா. நேரமாகிவிட்டது. உன்னை விமான நிலையத்தில் விட்டு விட்டுப் போகிறேன்'' என்று கூறிக் கொண்டே முரளி விரைவாக மாடிப் படிகளில் இறங்கினான். சாமிநாதனும் பெட்டியைத் தூக்கிக்கொண்டு அவனைப் பின்தொடர்ந்தான்.

* * *

'பாரதமணி'க் கட்டிடத்தைவிட்டு வெளியே வந்த சிவராமன், சற்றுத் தள்ளி ஒரு மரத்தடியில் அமர்ந்து பீடியைப் புகைத்துக் கொண்டிருந்த நல்லதம்பியை நெருங்கினான்.

''என்ன சொன்னான்?'' — நல்லதம்பி கேட்டான்.

''சம்மதிக்கவில்லை.''

''பயமுறுத்துவதுதானே?''

''பயப்படக் கூடியவனில்லையே?''

''படங்கள் பிரசுரமானால் கட்சி மீதுதான் ஜனங்கள் சாடுவார்கள். பஸ்ஸில் நம் ஆட்கள் தீ வைக்கும்போது படம் எடுத்ததாகக் கேள்வி. படம் அச்சாகி விட்டால் தீ வைத்தவர்கள் பிடிபட்டு விடுவார்களே...'' கவலையுடன் கேட்டான் நல்லதம்பி.

சிவராமன் மரத்தடியை விட்டு விலகித் தெருவில் நடக்கத் தொடங்கினான். நல்லதம்பியும் தொடர்ந்து நடந்தான்.

''கல்லடி பட்டது போதாது போலிருக்கிறது'' என்றான் நல்லதம்பி கோபத்துடன்.

''அன்றைக்கு நீ செய்தது பெரிய தவறு. என்னிடம் கேளாமல் எதற்கு இந்த மாதிரியெல்லாம் தூண்டி விடுகிறாய்?''

''நான் ஏன் தூண்டி விடுகிறேன்? தலைவர் ஐயாதான் பயமுறுத்தி வைக்கும்படி சொல்லி விட்டுப் போனார்.''

''என்னிடம் நீ கேட்டிருக்க வேண்டாமா?''

''உன்னிடம் கேட்டால் நீ வேண்டாம் என்பாய். முரளி உனக்கு நண்பன்.''

''இந்த மாநிலத்துக்கு நான்தான் தலைவன். கட்சி சம்பந்தமாக எது நடந்தாலும் நான்தான் அதற்குப் பொறுப்பு... புரிந்ததா...?'' என்றான் சிவராமன், கோபத்துடன். நல்லதம்பி பதில் ஏதும் கூறாமல் பீடியைத் தூர எறிந்து விட்டு நடந்து கொண்டிருந்தான்.

இருவரும் கட்சிக் கட்டடத்தை அடைந்தபோது நடுஜாமம் ஆகிவிட்டது. சிவராமனும் நல்லதம்பியும் அங்கேயே மொட்டை மாடியில் படுத்துக்

ஐந்தே
காசு
போதும்
உங்கள்
குடும்பம்
பெருகாமல்
தடுக்க!







உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம்

## குடும்பக் கட்டுப்பாட்டிற்கு

15 காசுக்கு 3

அரசாங்க ஆதரவினால் குறைந்த விலை

**வேண்டுமென்றபோது மட்டுமே பேறு...**

வேண்டுமென்றபோது மட்டுமே இன்று மக்கட்பேற்றை ஏற்படுத்திக் கொள்ளலாம். இதற்கு நிரோத் உதவும்.

**தாய் சேய் இருவரின் தேகநலம்...**

குழந்தைகள் சரியான வளர்ச்சி பெற, முதல் மூன்று நான்கு வருடங்கள் அவர்களுக்கு விசேஷமான பராமரிப்பு தேவை என்று வைத்தியர்கள் கூறுகின்றனர். பேற்றில் இழந்த தேக வலுவை மீண்டும் பெற தாய்க்கும் சிறிது காலம் பிடிக்கும். நிரோத் உபயோகிப்பதனால், அடுத்த பேற்றைச் சுலபமாகத் தள்ளிப் போடலாம்.

நிரோத் (காண்டோம்) உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம் ஆண்களுக்கானது. எளிமையான, தீமையற்ற நிரோத் உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது. இதை உபயோகிப்போரின் தேகநலம் பாதிக்கப்படுவதில்லை. நிரோத் எங்கும் கிடைக்கும்

---

நிரோத், வீட்டுச் சாமான்கள் விற்கும் கடை, மருந்துக் கடை, வெற்றிலைப் பாக்குக் கடை ஆகியவற்றில் கிடைக்கும்.

davp 70/67

# இயற்கையான அழகுடன் திகழ



## ஆஷா

### அழகு சாதனங்கள்






புதிய முறையில் தயாரிக்கப்பட்ட ஆஷா முகப்பவுடர் உங்கள் வதனத்தின் இயற்கைப் பொலிவைப் பரிமளிக்கச் செய்வதுடன், மணிக்கணக்கில் நீடித்திருக்கும் மென்மைமிகு பிரகாசத்தை உங்கள் சருமத்திற்கு அளிக்கிறது. இயற்கை, ரோஸ், பீச், வெள்ளை, ஆகிய நான்கு கோலாகலமான வர்ணங்களிலிருந்து, உங்கள் வதனத்திற்கு இணைந்துள்ளதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.

உங்கள் சருமத்தை இளமைப் பொலிவுடனும், மழமழப்பாகவும், துல்லியமாகவும் வைத்திருக்க ஆஷா வானிஷ் க்ரீம் உபயோகியுங்கள். இயற்கையான அழகு பொலிவிற்கு இது மிகச் சிறந்த பவுடர் தளம்.

ஆஷா காஜல் (கண்மை) உங்கள் கவர்ச்சிக்கண்களுக்குக் குளுமை தந்து, சோர்வைப் போக்குகிறது.

உங்களுடைய ஒப்பனைக்கு முழுமை தர, ஆஷா சாந்து உபயோகியுங்கள். மூன்று வெவ்வேறு வர்ணங்களில் நீர்மமாகவோ, பசையாகவோ கிடைக்கிறது.

கொண்டார்கள். சற்று நேரம் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவாறு படுத்துக் கொண்டிருந்த சிவராமன், எழுந்து உட்கார்ந்து, தலையணையை எடுத்து மடியில் போட்டுக் கொண்டான். பக்கத்துப் பாயில் நல்லதம்பி காலை மடக்கிக் கால்மேல் கால் போட்டுக் கொண்டு மல்லாந்து படுத்திருந்தான்.

''விஜயவாடா தலைவருக்குப் பகையாளி யார்...? கொலைக்கு என்ன காரணம்?'' — சிவராமன் கேட்டான்.

நல்லதம்பி நிலவைப் பார்த்துக் கொண்டே சொன்னான்: ''பகையாவது, மண்ணாவது... தலைவர் ஐயாவுக்குச் சுப்பா ரெட்டியைப் பிடிக்கவில்லை. இவனால் விஜயவாடாவில் கட்சிக்குள் பிளவு ஏற்பட்டுவிடும் போலிருந்தது....''

''அதனால்?''... பரபரப்புடன் கேட்டான் சிவராமன்.

''கட்சி குலைவதைப் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? கட்சிக்காக ஆளைப் பலி கொடுக்க நேர்ந்துவிட்டது'' என்றான் நல்லதம்பி.

சிவராமனின் உடலுக்குள் ஏதோ ஓர் உணர்வு புகுந்து முதுகெலும்புக்குள் நுழைந்து நடுங்க வைத்தது. கண் கொட்டாமல் நல்லதம்பியை வெறிக்கப் பார்த்தான். நல்லதம்பியோ எவ்விதப் பரபரப்பும் இல்லாமல் அமைதியாக நிலவைப் பார்த்தவாறிருந்தான்.

முந்தின நாள் இரவு, முரளி கூறியது சிவராமனின் நினைவில் படர்ந்தது.

முரளியின் ஊகம் சரியாகி விட்டதே! கட்சிக்குள்ளிருந்தும் எனக்குத் தோன்றாத ஒரு விஷயத்தை முரளி ஊகித்து விட்டானே! இதுகூட எனக்குப் புரியாமல் போய்விட்டதே...!

'இது, அநேகமாகக் கட்சிக்குள் நடந்த சதியாக இருக்கும். வேதமூர்த்தியின் வேலையாகவும் இருக்கலாம்'. என்றல்லவா முரளி சொன்னான்! எவ்வளவு துல்லியமாக ஊகித்து விட்டான்!

சிவராமனுக்கு ஒரே வியப்பு!

வேதமூர்த்தியின் முகம் சிவராமனின் கண்களுக்கு முன்னால் தோன்றி, சிரிப்பது போன்ற பிரமை தட்டியது. பயத்தினால் ஒரு முறை தன் கண்களை மூடித் திறந்தான்.

''இந்த மாதிரி சில சமயங்களில் கட்சியின் நன்மைக்காக நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது. கருங்காலிகளைக் களையெடுக்கவில்லையென்றால், கட்சியே அழிந்து விடும்'' என்றான் நல்லதம்பி.

''பல வருஷங்களாக நீ தலைவரோடேயே சுற்றியிருக்கிறாய். அவரைப் பற்றித் தெரிந்து வைத்திருக்கிறாய்'' என்றான் சிவராமன். இன்னும் அவனிடமிருந்து பயம் நீங்கவில்லை.

''ஒரு சமயம் ஐயாவும், நானும் தஞ்சாவூரில் தலைமறைவாக இருந்தோம். அப்போது எல்லா இடங்களிலும் கிஸான் எழுச்சி நடந்து கொண்டிருந்தது. நம் தலைவர்களைக் கைது செய்ய உத்தரவிட்டிருந்தது அரசாங்கம். மூன்று மாதங்கள் தஞ்சாவூரில் தலைமறைவா யிருந்தோம். தஞ்சாவூரில் ஒரு சப்-இன்ஸ்பெக்டர் கொலை செய்யப்பட்டுத் தலை வேறு உடல் வேறாகக் கிடந்த செய்தியைக் கேள்விப்பட்டிருப்பாயே'' என்று கூறிவிட்டுப் பாயில் எழுந்து உட்கார்ந்தான் நல்லதம்பி.

''ஆமாம். அப்போது படித்துக்கொண்டிருந்தேன். கொலை செய்தது யார்?''— ஆவலுடன் கேட்டான் சிவராமன்.

''தஞ்சாவூரில் திருவிழா நடந்து கொண்டிருந்தது. நானும் ஐயாவும் மாறுவேஷத்தில் கூட்டத்தோடு கூட்டமாக நின்று கொண்டிருந்தோம். அப்போது, சற்றுத் தள்ளி நின்றுகொண்டிருந்த சப் இன்ஸ்பெக்டர், ஐயாவையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். அவரும் ஐயாவும் ஒரே வகுப்பில் படித்தவர்களாம். ஐயாவை அடையாளம் கண்டு கொண்டு விட்டார். சப் இன்ஸ்பெக்டர் சற்றுத் திரும்பியதும் ஐயா, சற்றுத் தூரத்தில் மாறு வேஷத்

தில் நின்று கொண்டிருந்த தஞ்சாவூர்த் தோழரிடம் சப் இன்ஸ்பெக்டரைச் சுட்டிக் காட்டிச் சைகை செய்துவிட்டுக் கூட்டத்தில் மறைந்துவிட்டார். நானும் கூட்டத்துக்குள் நழுவி விட்டேன். அரை மணி நேரத்துக்குள் சப் இன்ஸ்பெக்டரின் கதை முடிந்து விட்டது.''

சிவராமன் திறந்த வாய் மூடாமல் விழி பிதுங்க நல்லதம்பியைப் பார்த்துக்கொண்டிருந்தான். அவனுடைய உடல் வியர்த்துக் கொட்டியது. தொண்டை வறண்டு விட்டது. நாக்கினால் உதட்டை இரண்டு முறை தடவிக் கொண்டான்.

''இப்படி ஒன்றா, இரண்டா... கட்சியை வளர்க்க ஐயா பட்டிருக்கும் பாடும், தாண்டி வந்த ஆபத்துக்களும் சொல்லி முடியாது...'' என்று நல்லதம்பி கூறிவிட்டு மீண்டும் பாயில் படுத்தான்.

சிவராமனும் பாயில் படுத்துக்கொண்டான். அவனுடைய மனத்தில் குழப்பம் குடிகொண்டிருந்தது. நிலவு, அவர்கள் இருவரையும் உற்றுப் பார்த்தவாறு நகர்ந்து கொண்டிருந்தது.

திடீரென்று சிவராமன், பரபரப்புடன் எழுந்து உட்கார்ந்தான். நல்லதம்பி அசைந்து கொடுக்கவில்லை. மல்லாந்து படுத்தவாறு வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''விஜயவாடாக் கொலையைப் பற்றிப் போலீஸ் துப்புத் துலக்கி விட்டால்?''— திடீரென்று சந்தேகத்தைக் கிளப்பினான் சிவராமன். அவனுடைய கேள்வியில் பயமும் சேர்ந்து வந்தது. நல்லதம்பி சிரித்துக் கொண்டே, மெல்ல எழுந்து பாயில் உட்கார்ந்தான்.

''இந்தப் போலீஸ் கையில் அகப்படும்படியாகவா நம் கட்சியின் வேலைகள் இருக்கும்? எல்லாம் கச்சிதமாக நடந்து விட்டது. அந்தக் கவலையே வேண்டாம்'' என்றான் அலட்சியமாக. பிறகு சொன்னான்:

''ஐயாவிடம் ஒரு லிஸ்ட் இருக்கிறது. அவர் யாரையெல்லாம் சந்தேகப்படுகிறாரோ அவர்கள் பெயர்கள் அதில் இருக்கின்றன. எந்தப் பெயருக்கு அடியிலாவது சிவப்புப் பென்சிலால் கோடு இழுத்து விட்டார் என்றால் அந்த நபருடைய கதை மூன்று நாட்களுக்குள் முடிந்துவிடும். ஐயாவுடைய அந்தரங்கக் காரியதரிசியாக இருக்கிறாரே, தண்டாயுதபாணி, அவருடைய பொறுப்புத்தான் எல்லாம். காரியத்தை முடித்து, அறிக்கையும் சமர்ப்பித்து விடுவார். ஐயா வாய்விட்டுச் சொல்லவும் மாட்டார். லிஸ்டைத் தினமும் தண்டாயுதபாணி பார்ப்பார். எந்தப் பெயருக்காவது சிவப்புக் கோடு கண்டால், அதற்கான வேலையில் உடனே இறங்கி விடுவார்.''

சிவராமன் அருவருப்புடன் முகத்தைச் சுளித்தான். ''எவ்வளவு கொடுமையான காரியம்'' என்றான். அவன் நெஞ்சில் நிறைந்திருந்த கசப்பு, வார்த்தைகளில் தெரிந்தது.

''கொடுமைதான். திருநெல்வேலியில் 'கம்யூனிஸ்ட் சதி வழக்கு' நடந்ததே தெரியுமா?'' — நல்லதம்பி கேட்டான்.

''ஓ.... நன்றாக ஞாபகம் இருக்கிறது. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்து இரண்டில் அந்த வழக்கு நடந்தது இல்லையா?''

''அப்போது ஐயா, அந்தக் கட்சியில் ஒரு முக்கியமான தோழர். எல்லோரும் தலைமறைவாகச் சுற்றிக் கொண்டிருந்த காலம் அது. அப்போதுதான் நடராஜன் என்ற தோழரைக் கொலை செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் கட்சிக்கு ஏற்பட்டு விட்டது.''

''நீயும் அப்போது உடன் இருந்தாயா?'' பரபரப்புடன் கேட்டான் சிவராமன்.

''வேறு வழி? கட்சி கட்டளை இட்டு விட்டது. காரியத்தை முடித்துத்தானே தீர வேண்டும்....? நடராஜன், கம்யூனிஸ்ட் கட்சியில் ஒரு முக்கியமான நபர். திடீரென்று துரோகியாகிவிட்டான். போலீசுக்கு உளவு சொல்லும் அளவுக்குக் கூடப் போய் விட்டான். கட்சி, அவனைத் தீர்த்துவிட முடிவு செய்து விட்டது. அம்பாசமுத்திரத்துக்குப் பக்கத்தில் கருணை ஆற்றங்கரையில் காத்திருந்தோம். நடராஜனை ஒரு தோழர், எப்படியோ ஏமாற்றி அந்த இடத்துக்கு அழைத்து வந்தார்.... 'ஆட்டுக்கடாவைக் கருணையாற்றங் கரைக்கு அழைத்து வரவும். அங்குதான் விருந்து' என்று அந்தக் கட்சித் தோழருக்குத் தண்டாயுதபாணி குறிப்பு எழுதி அனுப்பியிருந்தார். அந்தத் தோழர், நடராஜனுக்கு நண்பர். நிலவு வெளிச்சம் நன்றாக இருந்தது. எங்களைக் கண்டதும் நடராஜனின் முகத்தில் பிரேதக் களை தட்டி விட்டது. அவனைப் பார்க்கப் பரிதாபமா யிருந்தது. உயிரைக் காப்பாற்றும்படி அழுதான். கையெடுத்துக் கும்பிட்டான். அவனுடைய புலம்பலும், கெஞ்சலும் இப்போதுகூட எனக்கு நன்றாக நினைவிருக்கின்றன... அந்தக் காட்சி இன்னும் என் கண்களுக்குள்ளேயே நிற்கிறது.''

சொல்வதை நிறுத்தி விட்டு நல்லதம்பி, வானத்தை அண்ணாந்து பார்த்தான்.

(தொடரும்)

குடும்பத்தினர் அனைவரும்
திட ஆரோக்கியத்துடன் திகழ
:பாஸ்:போமின்





:பாஸ்:போமின்
- சக்தியை அதிகரிக்கிறது
- பசியைத் தூண்டுகிறது
- வலிவைப் பெருக்குகிறது
- நோய்களை எதிர்க்கும் சக்தியைக் கூட்டுகிறது.






ஸ்க்விப் 'TM'
SARABHAI CHEMICALS

ஈ.ஆர் ஸ்க்விப் & ஸன்ஸ் இன்-கார்ப்பரேட்டின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்காகும். கரம் சந்த் ப்ரேம் சந்த் பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

:பாஸ்:போமின்...
பழரஸ மணம் கமழும்
பச்சை நிற விடமின்
டானிக்.

Shilpi HPMA-35A/70 Tam




“என்ன அக்கா இது? இன்றைக்குப் பார்த்து என் எல்லா ஜாக்கெட்டுகளையும் லாண்டரியில் போட்டிருக்கிறாயே! இந்தப் புடவைக்கு 'மாட்சாக' ஜாக்கெட் எதைப் போட்டுக்கறது?'' என்று சிணுங்கினாள் தாரா.

''உன் அத்திம்பேரோட காரியம். 'ஏகப் பட்ட அழுக்கு சேர்ந்து போய் விட்டது' என்று சத்தம் போட்டு விட்டு எல்லாவற்றையும் கொண்டு போய் லாண்டரியில் போட்டு விட்டார்.''

''அது சரி அக்கா. இப்பொழுது நான் எப்படி டிரஸ் பண்ணிக் கொண்டு போவது என்று தெரியவில்லையே!''

''தப்பு உன் மேலேதான் தாரா. இன்றைக்கு 'இண்டர்வ்யூ' இருக்குன்னு உனக்குத் தெரியுமோ, இல்லையோ? நேற்றைக்கே எல்லாவற்றையும் ரெடி பண்ணி வைக்க வேண்டாமோ? சரி. இப்பவே நேரமாயிடுத்து. நீ சீக்கிரமாச் சாப்பிட்டுப் புறப்படத்தான் சரியாயிருக்கும். அதே கலரிலே எனக்கு ஒரு ஜாக்கெட் இருக்கிறதே. அது புதிசா அப்படியே இருக்கு. அதைப் போட்டுக் கொண்டு போ.... உனக்கும் எனக்கும் ஒரே அளவுதானே!''

''..... அது சரி.... ஆனால்... நான் அதை எப்படிப் போட்டுப்பேன்....?''

தாராவின் தயக்கத்துக்குக் காரணம் இல்லாமல் இல்லை. அவள் அக்கா மல்லிகாவின் ஜாக்கெட் கைவைத்தது. தாரா கையில்லாத 'ரவிக்'தான் அணிவாள். அது முன்புறம் 'லோ கட்' ஆகவும் இருக்க வேண்டும்; முதுகும் தெரிய வேண்டும்..

நவ நாகரிக நங்கை யென்றால் தாராவைத் தான் சொல்ல வேண்டும். அவள் நல்ல சிவப்பு. அகன்ற விழிகளும், அடர்த்தியான கூந்தலும் அவள் அழகுக்குத் தனி மெருகேற்றின. எடுப்பான அங்கங்களுக்கேற்ற உடற்கட்டு; அதற்கேற்ற உயரம். நைலான் புடவையை நாசுக்காக, அவிழ்ந்து விடுமோ என்று பார்ப்பவர் அஞ்சும் வண்ணம் உடுத்திக் கொள்ளுவதில் அவளுக்கு இணை அவள்தான்.

பெயருக்குத்தான் மல்லிகா தாராவின் அக்காள். பெற்ற தாயைவிட அதிக அன்புடன் அவளைப் பார்த்துக் கொண்டாள். தாரா கொஞ்சம் கண் கலங்கினாலும் மல்லிகா பொறுக்க மாட்டாள். இத்தனைக்கும் தாராவைவிட அவள் மூன்று வயதுதான் மூத்தவள். சின்னஞ் சிறு வயதிலேயே தாயை இழந்த சகோதரிகள் இருவரையும் தகப்பனார் தம் தந்தையின் துணையோடு அருமையாக வளர்த்தார். மல்லிகா எம். எஸ். ஸி.

படிக்கும் போது அவர்களின் அத்தை காலமாகி விட்டாள். இதனால் மனம் தளர்ந்து போன தந்தை மல்லிகாவுக்கு ஒரு நல்ல இடமாகப் பார்த்து விவாகத்தை முடித்துவிட்டார். அத்துடன் தம் கடமை முடிந்ததென்று அவரும் இறந்து விட்டார்.

தாராவுக்கு மணம் முடித்து வைக்க வேண்டிய பொறுப்பு மல்லிகாவின் தலையில் சுமந்தது. தனக்குக் கல்யாணமான பின்பும் தங்கையைக் காப்பாற்றும் பொறுப்பைத் தட்டிக் கழிக்க முடியாதென்று கணவனிடம் அவள் ஒரு நிபந்தனையைக் கோரியிருந்தாள். அவளுக்கு வாய்த்த கணவன் தங்கமானவன். அவன் நிபந்தனைக்கு மிகவும் மகிழ்ச்சியோடு இணங்கினான்.

தாயில்லாப் பெண் என்ற காரணத்தினாலும், அந்தத் துயரம் அவளைப் பாதிக்கக் கூடாது என்னும் நோக்கத்துடனும் மல்லிகா தாரா விஷயத்தில் மிகவும் தாராளமாக நடந்து கொண்டாள். அவளை பி. ஏ. வரையில் படிக்க வைத்தாள். தட்டெழுத்து, சுருக்கெழுத்து ஆகிய பயிற்சிகளிலும் தேர்ச்சி அடையச் செய்தாள். தாராவும் தன் அக்காவின் மனம் மகிழும்படி எல்லாப் பரீட்சைகளிலும் முதன்மையாகத் தேறி, அழகிலும் படிப்படியாக முன்னேறி ஒரு வன தேவதையைப் போல் வீட்டில் வளைய வந்தாள். நவீன மோஸ்தர் நடை, உடை பாவனைகளின் மாடல் மங்கை என்று கூறும்படி விளங்கினாள்.

கண்ணைக் கொத்தும் அவள் எடுப்பான அழகு வர வர மல்லிகாவின் மனத்தில் கவலைக்கு இடமாகியது. அதுவும் வாலிபர்கள் பலர் தாராவின் நவநாகரிக கோலத்தைக் காண வைத்த கண் வாங்காமல் வட்டமிடுவதைக் கண்ட பிறகு அவளால் எப்படி வருத்தப் படாமல் இருக்க முடியும்? இப்படி ஒரு புறம் வருத்தம் இருந்தாலும், தாராவின் குழந்தை முகமும் கலகலவென்னும் களங்கமற்ற சிரிப்பும் அவளிடம் எந்த விகற்பத்தையும் காண முடியாது செய்தன. இது பற்றி வெளிப்படையாகக் கண்டித்து அவளிடம் எதுவும் பேச முடியாமல் தவிப்பாள். சில சமயம் அவளையும் மீறிக் கண்டிக்கத் தொடங்கி விடுவதும் உண்டு.

தாராவின் கல்லூரிப் படிப்பு முடிந்து, தட்டெழுத்து, சுருக்கெழுத்து முதலிய பயிற்சிகள் முடிந்தும் அவளுடைய நவீனப் போக்கு மாறவில்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் தாராவை வேலைக்கு அனுப்பும் பிரச்னை எழுந்தது.

தாராவுக்குத் தான் எப்படியும் வேலைக்குப் போயாக வேண்டும் என்று ஒரு துடிப்பு. அவள் வேலைக்குப் போனால் அந்தக் குடும்பத்துக்கு மிகவும் உதவியாக இருக்கும். அப்பா போன பிறகு தன்னை ஆளாக்கி, படிக்க வைத்து, பட்டதாரியாக்கிப் பலவிதங்களிலும் சிரமப்பட்டிருக்கிற அக்கா, அத்திம்பேர் இருவருக்கும் இனி மேலும் பாரமாயிருக்க அவள் விரும்பவில்லை. அதன் விளைவுதான் இந்த இண்டர்வ்யூ.

'இண்டர்வ்யூ'வுக்குப் போகும் போது தாராவின் முகம் சுரத்தாக இல்லை. அவள் மனசுப்படி 'டிரஸ்' பண்ணிக் கொள்ள முடியாததுதான் காரணம். இருந்தாலும் முதன் முதலில் கிடைத்த வேலை. அதுவும் அத்திம்பேர் அவளுக்காக முயற்சி செய்து சிரமப்பட்டுத் தேடித் தந்திருக்கிறார். அதைத் தட்டிக் கழிக்க அவளுக்கு விருப்பமில்லை. மேலும், அது பெரிய கம்பெனியாதலால், கை நிறையச் சம்பளம் கிடைக்கும். அக்காவின் குடும்பத்துக்கு நிறைய உதவலாம். இந்த நோக்கத்தோடு தான் தாரா 'இண்டர்வ்யூ'வுக்குப் போனாள். தன் உடையே உத்தியோகத்துக்கு ஒரு தடையாயிருந்து விடுமோ என்று அவளுக்கு உள்ளூற ஒரு பயம்.

தாரா 'இண்டர்வ்யூ'வுக்குப் போய் விட்டு வீட்டுக்குத் திரும்பியதும், மல்லிகா மிகவும் மலர்ச்சியோடு அவளை வரவேற்றாள். ''போன காரியம் ஜெயம்தானே? உனக்குக் கொடுக்காமல் அந்த வேலையை வேறு யாருக்குக் கொடுக்க முடியும்?'' என்று அன்பு பொங்கக் கேட்டுவிட்டு அவளை ஆசையோடு அணைத்துக் கொண்டாள். ஆனால் தாரா அவ்வளவாக உற்சாகமாயில்லை. அதைக் கண்ட மல்லிகா பதறிப் போனாள். ''என்ன நடந்தது, தாரா? 'இண்டர்வ்யூ'விலே உனக்கு வெற்றிதானே கிடைத்தது? அப்படியே இது சரிப்படாவிட்டால் இன்னொரு வேலை தேடிக் கொண்டால் போகிறது.....!'' என்று வாஞ்சையோடு கூறிய அக்காவைப் பரிதாபமாகப் பார்த்தாள் தாரா.

'' தாரா, ஏன் சோர்வாயிருக்கிறாய்? உனக்கு இந்த வேலை பிடிக்கவில்லையா?''

''..... ஒன்றுமில்லை. என் டிரஸ் சரியாயில்லை. இந்தக் கை வைத்த ரவிக்கையைப் போட்டுக் கொண்டு போவதற்கே எனக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. என்னை அழைத்ததும் வயதான மாமி மாதிரி புடவையை இழுத்துப் போர்த்திக் கொண்டு மானேஜரின் அறைக்குள் சென்றேன். என் மனசுக்குப் பிடிக்காத டிரஸ்ஸினாலேயே எனக்குக் குப்பென்று வியர்த்துக் கொட்டி விட்டது. மானேஜர் என்னை ஏற இறங்க ஒரு முறை பார்த்ததுமே எனக்குப் பூமியே நழுவிப் பாதாளத்துக்குப் போய்க் கொண்டிருப்பது போல் தோன்றியது. அசடு வழிய நிலைகொள்ளாமல் தவித்தேன். அவர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் யந்திரம் மாதிரி மன மனவென்று பதில் சொன்னேன். அவர், பார்வையினாலேயே சுட்டுவிடுகிற மாதிரி ஊடுருவிப் பார்த்து விட்டு, ''சரி. போகலாம்'' என்று கூறிவிட்டு அடுத்த பெண்ணை அழைத்து விட்டார்.''

''அதனாலென்ன! ஒருமுறைக்காக அழைத்திருப்பார். அதைக் கண்டு நீ குழம்பிக் கொள்ளக் கூடாது.''

''இல்லை, இல்லை. எனக்கு அடுத்தபடியாக வந்தவள் என்ன 'டிப் டாப்பாக' உடை அணிந்திருந்தாள் தெரியுமா? உள் பாடி தெரிகிற மாதிரி ஹக்கோபா பிளவுஸ்..... அழகை எடுத்துக் காட்டுகிற மாதிரி நைலான் ஸாரி. அதன் கலருக்கு மாட்சாகிற மாதிரி கலர்க் குங்குமம். 'சப்பல்ஸ்!' இப்படி மோகினி மாதிரி தோன்றினாள். நானோ கைவைத்த ரவிக்கையும், காஞ்சிபுரம் பட்டுப்

புடவையுமாக வேர்த்து விறுவிறுக்க ஏறோ தாறோ என்று போனேன். கர்ச்சிப்கூட எடுத்துக் கொள்ளப் பிடிக்கவில்லை. நிச்சயம் மானேஜரின் அந்தரங்கக் காரியதரிசி வேலை அவளுக்குத்தான் கிடைக்கும். அதனால்தான் என் மனசு வேதனைப்பட ஆரம்பித்துவிட்டது. நான் மட்டும் வழக்கம் போல் உடுத்திக் கொண்டு போயிருந்தால் நிச்சயம் எனக்கு இந்த வேலை கிடைத்திருக்கும். கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை....'' என்று தாங்க முடியாத சோகத்தோடு கூறிவிட்டு முழங் கால்களில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மினாள். மல்லிகாவுக்கு அவளை எப்படித் தேற்றுவதென்றே தெரியவில்லை.

சமயம் பார்த்துத் தாராவின் உடைகளை வாண்டிரியில் போட்டுவிட்ட கணவன் மீது கோபம் கோபமாக வந்தது.

அன்று தபாலில்வந்த வேலைக்கான ஆர்டரைப் பார்த்ததும் தாராவுக்கு ஆனந்தம் பிடிபடவில்லை. ''அக்கா, அக்கா ! எனக்கு ஆர்டர் வந்து விட்டது !'' என்று கூறி ஆனந்தத்தால் பொங்கினாள். தன் அருமைச் சகோதரியின் ஆனந்த பரவசத்தைக் கண்டு மல்லிகா மகிழ்ச்சியால் திணறினாள். எப்படியோ அவளுக்கு வேலை கிடைத்துவிட்டதே!

வேலைக்கு ஆர்டர் வந்துவிட்ட மகிழ்ச்சியில் தன் டிரஸ் விஷயத்தைப் பெரிதுபடுத்தவில்லை. அவள் டிரஸ் கொஞ்சம் கர்நாடகமாயிருந்தாலும், சிறிது உற்சாகத்துடன் ஆபீசுக்குச் சென்றாள். ஆனாலும் அவளுக்கு மனசுக்குள் குறைதான்.

அவள் போன சற்று நேரத்துக்கெல்லாம் மல்லிகாவின் கணவன் ஆபீசிலிருந்து வந்தான்.

''தாராவுக்கு வேலைக்கு ஆர்டர் வந்துவிட்டது. அது இருக்கட்டும். நீங்கள் என்ன இப்பொழுது வீட்டுக்கு வந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் மல்லிகா.

''தாரா, புறப்பட்டு விட்டாளா, இல்லை, நவநாகரிக 'டிரஸ்' இல்லை என்ற காரணத்தால் 'ஸ்டிரைக்' செய்துவிட்டாளோ என்று பார்க்கத்தான். அப்பாடி ! இப்பத்தான் என் மனசுக்கு நிம்மதியாயிற்று.... !''

''அப்படியானால் அவளுக்கு ஆர்டர் வந்தது உங்களுக்குத் தெரியுமா ?''

''தெரியுமாவாவது ? ஆர்டர் போடச் சொன்னதே நான்தானே. அந்தக் கம்பெனி மானேஜர் ராமாமிர்தம் எனக்கு ரொம்ப வேண்டியவன்.''

''அப்படியா ? இது வரையில் ஒன்றுமே சொல்ல வில்லையே.....!''

''சொல்ல வேண்டாம் என்றுதான் சும்மா இருந்தேன்.''

''அது சரி. இந்தச் சமயம் பார்த்துத் தாராவின் உடைகளை யெல்லாம் லாண்டிரியில் கொண்டு போய்ப் போட்டு விட்டீர்கள். இண்டர்வியூவின் போதும் அப்படித்தான் செய்தீர்கள். பாவம், அவள் மனசுக்குப் பிடிக்காத உடையை உடுத்திக் கொண்டுபோயிருக்கிறாள் !''

'' நான் வேண்டுமென்றுதான் அப்படிச் செய்தேன். அவள் இஷ்டப்படி நவநாகரிக உடையில் சென்றிருந்தால் இந்த வேலை கிடைத்திருக்காது. என் நண்பன் ராமாமிர்தம் பெண்களின் உடை விஷயத்தில் கொஞ்சம் பழமையை விரும்புகிறவன். அவன் தாயார், தகப்பனார் இருவரும் ரொம்பக் கர்நாடகம்.....''

''மானேஜருடைய தாயார் தகப்பனாரைப் பற்றி நமக்கென்ன கவலை?''

''கவலைப்பட வேண்டிய அவசியம் இருப்பதால்தான் சொல்கிறேன். தாராவை ராமாமிர்தத்துக்கு ரொம்பவும் பிடிக்கப் போச்சு. அவன் இன்ஸ்டிடியூட்டுக்குப் போகும் போதே பல தடவை பார்த்திருக்கிறானாம். அவள் மாடர்னாக டிரஸ் பண்ணிக் கொள்வதுதான் அவனுக்குப் பிடிக்கவில்லை. 'என்னப்பா உன் மனைவி தன் தங்கையை ஒன்றும் சொல்லித் திருத்துவதில்லையா? ரொம்பச் செல்லம் கொடுத்துக் கெடுக்கிறீர்களே' என்று ஒரு தடவை அவன் பேச்சுவாக்கில் என்னிடம் சொன்னதை நான் மறக்கவேயில்லை.''

''நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள். நம்ம தாராவை ராமாமிர்தத்துக்கே கொடுத்து விடலாம் என்கிறீர்களா? அவள் சம்மதிக்க வேண்டாமா?''

''ராமாமிர்தம் நல்ல அழகன். 'டிப்டாப்' பாக உடைகள் அணிவதில் அவனுக்கு இணை அவன்தான். தாரா நிச்சயம் சம்மதித்துவிடுவாள். அவன் பேச்சும், நடை உடை பாவனைகளும் தாராவைக் கவர்ந்துவிடும். நான் பின்னே போட்டுத்தானே இந்த வேலைக்கு ஏற்பாடு செய்தேன்? சில மாதங்களுக்குத் தாரா வேலைக்குப் போகட்டும். அப்புறம் அவளே கல்யாணத்துக்குச் சம்மதித்து விடுவாள் !''

''இந்த விவரங்களெல்லாம் இருக்கட்டும். தாராவை நினைத்தால்தான் எனக்குக் கவலையாயிருக்கிறது. இவளுடைய நவநாகரிகப் போக்குக்கு இந்த உத்தியோகம் சரிப்பட்டு வருமா? தொடர்ந்து வேலை பார்ப்பாளா ?''

'' அதைப் பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்? அது இனி அவர்கள்பாடு. அடக்கமாக உடுத்தினால்தான் மானேஜருக்குப் பிடிக்கும் என்பதைச் சீக்கிரமே புரிந்து கொண்டு அடியோடு மாறிப் போவாள் பார்.''

மல்லிகாவுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. ''நீங்கள் ரொம்ப சமர்த்து. ஆள் உள்ளுக் குள்ளே. அமுக்கமாக இருந்து வேலை செய்திருக்கிறீர்களே!'' என்று பாராட்டி மகிழ்ச்சி தாங்காது கணவனை அப்படியே தழுவிக் கொண்டு விட்டாள்.

அந்தச் சமயம் பார்த்துத்தானா தாரா வர வேண்டும் ?

## சில்லறைக் கண்டனம்!



நியூயார்க் நகரில் வசிக்கும் மன் ஜாயுல் என்னும் வர்த்தகருக்கு டெலிபோன் நிலயம் பணியாற்றும் முறையில் அதிருப்தி ஏற்பட்டது. அதைக் காட்ட அவர் தாம் செலுத்த வேண்டியிருந்த 2000 டாலர் டெலிபோன் கட்டணத்துக்கும் பணத்தைச் சில்லறையில் 2000,00 சென்டுகளாகக் கட்டினார்.

ஆதாரம்: டிட்பிட்ஸ் - தகவல்: கன்விரா




# எல்லாப் பண்டங்களையும் சுதாவில் தயார் செய்து உயர் ரக உணவை அடைய முயலுங்கள்

உங்கள் உணவுக்கு சுதா தனிப்பட்ட மண, ருசியையும் கொடுத்து உங்களுக்கு மேலும் போஷாக்கையும் அளிக்கிறது. சுதா உணவையும் விருந்துபோல் செய்கிறது.

அலுத்துப்போன உணவை உண்டு திருப்தி அடைவதைக் காட்டிலும் பண்டங்களை சுதாவில் தயாரித்து விருந்தைப்போல் சாப்பிடுங்கள்

உங்கள் சமையலுக்கு சுதா இன்றியமையாத சாதனம்.

## சுதா வனஸ்பதி

கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிமிடெட்
ஹைட்ரோஜனேஷன் டிவிஷன்
கோழிக்கோடு-5 கேரளா





# வாழ்க்கைப் போராட்டம்— அது தாவரங்களுக்கும் உண்டு!



ஆரஞ்சு, எலுமிச்சை, நார்த்தைபோன்ற பழங்களுக்கு மேல் தோல் கனமாகவும் எண்ணெய்ப் பசை உள்ளதாகவும் கசப்பாகவும் இருக்கிறது. இது எதற்காக? கோடைக் காலத்தில் பழத்தில் சாறே இன்றிக் காய்ந்து போய்விடாதிருக்கத்தான் இந்த ஏற்பாடு. மேலும் சிறு பிராணிகள் பழத்தில் ஓட்டை செய்து வீணாக்காமல் இருக்கவும் உதவுகிறது. பழத்தின் வாழ்க்கை லட்சியம் என்ன? அதனை யாரேனும் உண்ண வேண்டும் என்பதே! தன்னை உண்ணப் போகிறவனுக்காக அது தன்னை முடிந்தவரை பாதுகாத்துக் கொள்கிறது. ஆனால், மரம் செடிகளின் பிற பகுதிகளுக்கு லட்சியங்கள் வேறு.

ஆகவே பாலைவனத்தில் உள்ள செடிகளில், சாறு மிகுந்த இலைகளின் மேல் பரப்பு தோல் போன்று கனமாகவும் மெழுகுத் தன்மையுடன் கூடியதாகவும் இருக்கிறது. இதனால் நீர் ஆவியாகாமல் காக்கப்படுகிறது. அது மட்டுமா? தாகத்துடன் வரும் ஒட்டகம் போன்ற மிருகங்கள் தங்களைத் தின்று அழித்து விடாதிருக்கக் கூர்மையான முட்களையும் வளர்த்துக் கொள்கின்றன. முட்களில் சில கனமானவை, நீண்டவை. வேறு சில ரோமம் போன்று சிறியவை. கூர்மையானவை.



பிராணி இதனை ஒரு தடவை மேய்ந்து அசை போட்டால் போதும்! வாயில் எரிச்சலாவது எரிச்சல்! மறுபடியும் அந்தச் செடியில் வாய் வைக்குமா?

நிறையத் தண்ணீரும் சூரிய ஒளியும் உள்ள பிரதேசங்களில் வளரும் செடிகளுக்கு முட்களோ அல்லது கனமான தோலோ அவசியம் இல்லைதான். ஒரு நாளைக்கு ஓர் அடி என்ற விகிதத்தில் உயர்ந்தும் கிளைத்தும் வளர்ந்து கொண்டே போகும் சக்தி அவற்றுக்கு இருந்தால் போதும்; — ஒரொரு சமயம் ஆடு மாடு மேய்ந்து விட்டாலும் அடியோடு அழியாமல் சமாளித்து விடலாம்.

சிரமமான காரியம் கடுங் குளிர்ப் பிரதேசத்தில் உயிர் வாழ்வதுதான். இங்கும் வாழ்க்கையில் வெற்றி பெறுவதற்கான வழிகள் தெரியும் தாவரங்களுக்கு. கோடையில் முளைத்து, பூத்து, விதைகளை உற்பத்தி செய்துவிட்டு மடியலாம். விதைகளின் ஜீவ சக்தி கடும் பனியிலும் அழிவதில்லை. இளவேனிற் காலத்தில் அவை முளைக்கும்.

இன்னொரு வழி: கோடையில் செழித்து வளர்ந்து, குளிர் காலத்தைப் பூமிக்கடியில் வெதுவெதுப்பாகப் புதைந்து கிடந்து கழிப்பதற்கான சக்தியைச் சேமித்து வைத்துக்கொள்ளுதல். காரட், வெங்காயம் போன்றவை இந்த ரகம். இவை அடுத்த இளவேனிற் காலத்தில் மீண்டும் துளிர்த்து, செழித்து, பூத்து, விதை கண்டு பின் மடியும்.

இப்படி ஓராண்டு, ஈராண்டு வாழாமல் பல்லாண்டு வாழப் பிரியப்படும் தாவரங்களும் இருக்கின்றன. இவற்றுக்குக் குளிர்ப் பிரதேசத்தில் காலத்தை ஓட்ட மூன்று வழிகள் உள்ளன. சில செடிகளின் வேர் மட்டும் உறுதியாக நிரந்தரமாக இருக்கும். கோடையில் தழைக்கும் இலைகள், கிளைகள் ஆகியவை கடும் பனிக் காலத்தில் அடியோடு மறைந்து போகும். வேர் மட்டும் அடுத்த இளவேனிலை எதிர்நோக்கிப் புதைந்து கிடக்கும், பூமித் தாய் மடியில்.

சிலவற்றுக்கு நிரந்தரமான வேர்களுடன் சாசுவதமான கிளைகளும் உண்டு. பனிக்காலத்தில் இலைகள் எல்லாம் உதிர்ந்து பட்ட மரம் போல் காட்சி தரும். வெண்பனி விடை பெறும் நாளில் மாயாஜாலம் போல் பசுமைப் புரட்சி ஏற்பட்டிருக்கும் இம்மரங்களில்.



மூன்றாவதாக ஒரு ரகம் உண்டு. வெப்பமோ குளிரோ எப்போதும் பசுமையாக இருக்கும். இவை மிகவும் உறுதியாக, 'உன்னாலானதைப் பார்த்துக்கொள்' என்று வெண் பனியிடம் சொல்லக் கூடிய கல்லுளிமங்கனாக விளங்குபவை! சலசலத்து உதிர்ந்து போகும் மெல்லிய இலைகளை இவற்றில் பார்க்க முடியாது.

— மைக்கேல் ஆர்னால்டு

---



டெலிவிஷன் காரணமாக மக்களில் பலர், செய்தித் தாள்களைப் புறக்கணிக்கிறார்கள் என்ற நம்பிக்கை தவறானது என்பது தற்போது தெரிய வந்துள்ளது. மேற்கு ஜெர்மனியில் டூபிங்டன் நகரில் இது குறித்து ஆய்வு நடத்தப்பட்டது. செய்தித் தாள், வானொலி, டெலிவிஷன், சஞ்சிகை இவற்றில் ஏதேனும் ஒன்றுதான் கிடைக்கும் என்றால், எதனைத் தேர்ந்தெடுப்பீர்கள் என்று 4066 பேர்களிடம் கேட்கப்பட்டது. 61 சதவிகிதம் பேர்கள், செய்தித் தாள்களையும், 18 சதவிகிதம் பேர்கள் சஞ்சிகைகளையும், தேர்ந்தெடுத்தார்கள்.

- யூ.பி.என்.





சிறப்புச் சிறுகதை

# அதிர்ஷ்டம்

## எஸ். கிருஷ்ணமூர்த்தி

அவசரம் அவசரமாகச் சோற்றை அள்ளிப் போட்டுக் கொண்டு ஆபீசுக்குப் புறப்பட்ட போது மணி ஒன்பதரை ஆகிவிட்டிருந்தது. ஆபீஸ் பத்து மணிக்கு ஆரம்பம். ஐந்து நிமிஷம் 'கிரேஸ்' உண்டு; அதாவது ஒன்பது அடித்து ஐந்து நிமிஷங்களுக்குள் ஆபீசில் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் 'லேட்'டாகக் கணக்காகி விடும்.

காளிதேவியை ஸ்மரித்துக் கொண்டே காளிகாட் டிராம் டெப்போவுக்கு ஓடினேன். நல்ல வேளை, டிராம் தயாராக நின்று கொண்டிருந்தது. அரை மணியில் டல்ஹௌஸி போய்ச் சேர்ந்து விடலாம். நிம்மதியாகப் பெருமூச்சுவிட்டேன் நான்.

ஆனால் என் சந்தோஷம் அற்ப சந்தோஷமாகப் போய் விட்டது. பவானிப்பூர்ப் பகுதியை அடைந்ததும் டிராம் நின்று விட்டது. அதன் முன்னால் போய்க் கொண்டிருந்த டிராம்களில் ஒன்று தண்டவாளத்திலிருந்து இறங்கி விட்டதாம். பத்துப் பதினைந்து டிராம்கள் வரிசையாக நின்று கொண்டிருந்தன. அவற்றிலிருந்து இறங்கிய நூற்றுக் கணக்கான பிரயாணிகள் அங்கங்கே கூட்டம் கூட்டமாக நின்று கொண்டு அவ்வழியே செல்லும் பஸ்களில் ஏற முயன்று கொண்டிருந்தார்கள். பஸ்களிலோ கல்கத்தாவுக்கே உரிய அபரிமிதமான கூட்டம். சுமார் முப்பதுக்குக் குறையாத எண்ணிக்கையுள்ள பிரயாணிகள் ஒவ்வொரு 'ஃபுட்போர்டை'யும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய சக்கர வியூகத்தைத் தாண்டிக் கொண்டு உள்ளே நுழைய அடியேனுக்குத் திராணி இல்லை.

பக்கத்துக் கடையிலிருந்த கடிகாரம் மணி ஒன்பதே முக்கால் காட்டியது. இன்னும் கால் மணி நேரத்தில் ஆபீஸ் போய்ச் சேருவது இயலாத காரியம். 'லேட்'டாகப் போய்ப் 'பேச்சு' வாங்குவதைவிடப் போகாதிருப்பதே மேல் என்று தீர்மானித்தேன்.

எதிர்ச் சாரியில் பார்க். டிசம்பர் மாதச் சூரியனை இதமாகக் காய்ந்து வேண்டியதுதான். எதிர்பாராமல் கிடைத்த ஓய்வை நன்றாகத்தானே அனுபவிக்கலாமே! பார்க்குக்குள் நுழைந்தேன்.

பார்க்கில் ஒரு பெஞ்சிகூடக் காலி இல்லை. குளிர் காய்பவர்கள் அவற்றை ஏற்கனவே பிடித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு பெஞ்சியில் ஒருவர் மட்டுமே உட்கார்ந்திருந்தார். அவர் பக்கத்திலிருந்த காலி இடத்தில் நான் போய் உட்கார்ந்தேன்.

''ஜோசியம் பார்க்கிறீர்களா....?''

வங்காளி உச்சரிப்புடன் கூடிய இந்தியில் பேசியவர் என் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர்தான்.

திரும்பிப் பார்த்தேன். நீர்க் காவி ஏறியிருந்த வேஷ்டியை வங்காளி முறையில் கச்சமாக அணிந்திருந்தார். அதைத் தவிர வேறு துணி எதுவும் அணியவில்லை. அடர்த்தியான நீண்ட தாடி இளங் காற்றில் கம்பீரமாக அசைந்து கொண்டிருந்தது. மடியில் ஒரு சிறிய கித்தான் பை. நெற்றியில் பெரிய சிந்தூரப் பொட்டு; காளி உபாசகர் போலும். அவரைப் பார்த்தால் திரேதா யுகத்து ரிஷி ஒருவர் தப்பித் தவறி இருபதாம் நூற்றாண்டில் கல்கத்தாவுக்கு வந்து விட்டதாகத் தோன்றியது.

எனக்கு ஜோசியம் என்றாலே ஓர் 'அலர்ஜி'. என்றுமே எனக்கு எதிர்காலத்தைப் பற்றி அறிந்து கொள்ள ஆர்வம் கிடையாது.

''இல்லை! எனக்கு ஜோசியம் பார்க்க வேண்டாம்.''

''சும்மாப் பாருங்கள், சார்! நிறையப் பணம் கேட்பேன் என்று யோசிக்கிறீர்களோ? நாலணா கொடுங்கள், போதும்!''



''எனக்கு ஜோசியம் வேண்டாம். இந்தா ருங்கள், நாலணு!'' என்று காசை அவரிடம் நீட்டினேன்.

''எனக்குப் பிச்சை வேண்டாம், பாபுஜி! ஜோசியத்தை நான் தொழிலாகக்கூடக் கருதவில்லை. அது ஒரு கலை. ஆகையால் நான் கேட்பது கூலியல்ல, தட்சிணை! புரி கிறதா ?''

அவருடைய பேச்சில் ஒரு கம்பீரம் இருந் தது; ஒரு புதுமையின் கவர்ச்சி இருந்தது. அதற்கு முன்னல் என் உறுதி கரைந்து போய் விட்டது.

''சரி, சொல்லுங்கள் !''

'' நீங்கள் பிறந்த தேதியைச் சொல் லுங்கள்.''

நான் பிறந்த ஆங்கில வருஷம், மாதம், தேதியைச் சொன்னேன்.

''அது இல்லை ! இந்தியப் பஞ்சாங்கப்படி நீங்கள் பிறந்த மாதம், நட்சத்திரம் எனக்கு வேண்டும்.''

''எங்கள் பஞ்சாங்கப்படி மார்கழி மாதம், உத்தரட்டாதி நக்ஷத்திரம். ஆனல் வங்காளிப் பஞ்சாங்கப்படி......''

''தெரியும். உங்கள் மார்கழி மாதம் எங்கள் 'பௌஷ்' மாதம். என்ன நக்ஷத்திரம் சொன்னீர்கள், உத்தரட்டாதியா ?'' என்று கேட்டுக் கொண்டே அவர் தம் பையி லிருந்த பஞ்சாங்கத்தை எடுத்துப் புரட்டி ஞர். பிறகு திடீரென்று, ''என்ன ஆச்சரியம் பாருங்கள்! இன்றுதான் உங்கள் பிறந்த நாள்!'' என்று கூறினர்.

கேட்க எனக்கும் ஆச்சரியமாகத்தான் இருந்தது. சரியாக என் பிறந்த நாளன்று இவரைக் காண நேர்ந்தது ஒரு சுப சூசகமாக இருக்குமோ ?......

பஞ்சாங்கத்தைப் பார்த்து விட்டு மனத் துக்குள்ளே ஏதோ கணக்குப் போட்டு விட்டு அவர் சொன்னர், ''உங்கள் நல்ல காலந் தான் இன்று உங்களை கொண்டு வந்து விட் டிருக்கிறது. உங்கள் பிறந்த நாளான இன்று நீங்கள் நான் சொல்கிறபடி செய்தால் ஒரு வாரத்தில் உங்களுக்கு லட்சுமி கடாட்சம் ஏற் படும். நீங்கள் லட்சாதிபதியாகி விடுவீர்கள்.''

நான் லட்சாதிபதியாகி விடுவேனும் ! என்னை அப்படி ஆக்கும் திறமை படைத்த வர் நாலணு 'தக்ஷிணை' (கூலியல்ல!)க்காக ஜோசியம் சொல்லிக் கொண்டு திரிவானேன்? நான் 'ஒரு மாதிரி'யாகச் சிரித்தேன்.

ஜோசியரின் இதழ்களில் ஓர் இளநகை மலர்ந்தது. நான் நினைத்தது அவருக்குத் தெரிந்து விட்டது போலும் !

''உங்களுடைய அதிர்ஷ்டத்துக்கு வழி காட்டுகிற நான் என் ஜோசியத்தின் உதவி யால் எனக்கே ஏன் ஒரு வழி செய்து கொள்ளக் கூடாது? பாபுஜி! நான் ஜோசியத் தின் பெயரால் பிறருக்கு ஆசை காட்டி, அவர்களை ஏமாற்றிப் பிழைப்பு நடத்துபவன் என்று நினைக்கிறீர்கள்! நீங்கள் அப்படி நினைப்பது இயற்கைதான். ஆனல் நான் உங்களுக்கு முன்னமேயே சொன்னேனே ! ஜோசியம் எனக்குத் தொழிலல்ல. அதைக் கொண்டு எந்தவிதமான வசதியும் அடைய

எனக்கு அனுமதி இல்லை. என்னுடைய அன்றாடத் தேவை என்ன தெரியுமா? நாலணுவுக்கு 'மூரி' (முட்டைப் பொரி)யும் கங்கை நீரும்தான். அந்த ஒரு வேளை சாப்பாட்டோடு என் அன்றையப் பாடு தீர்ந்தது. நீங்கள் நாலணுவுக்கு மேலே கொடுத்தாலும் நான் வாங்கிக் கொள்ள மாட்டேன்!.... என்ன! நான் சொல்வதை நம்புகிறீர்களா ?''

எனக்கு நம்ப இஷ்டமில்லைதான்; ஆனால் நம்பாமலும் இருக்க முடியவில்லை. அவருடைய தோற்றத்திலும் குரலிலும் இருந்த ஏதோ ஒன்று என்னை நம்பத் தூண்டியது.

தயங்கிக்கொண்டே சொன்னேன், ''நீங்கள் சொல்வதை நம்புகிறேன்.... ஆனால்....''

''என்ன, ஆனால்?''

''அதிருஷ்டம் வருவதற்கு நான் ஏதோ செய்ய வேண்டும் என்று சொன்னீர்களே! நான் என்ன செய்ய வேண்டும்?''

''இன்றைக்குப் பச்சை நிறத்தில் ஏதாவது ஒரு பொருளை வாங்கி வைத்துக் கொள்ளுங்கள். வேறு ஒன்றும் செய்ய வேண்டாம். அடுத்த வாரம் அதிர்ஷ்ட லக்ஷ்மி உங்களைத் தேடிக் கொண்டு வருவாள்!''



சாதாரண ஆண்டில் கல்கியில் இடம் பெறும் சிறப்புச் சிறுகதைகள் அனைத்திலும் சிறந்த சிறுகதையைத் தேர்ந்தெடுப்பதில் வாசகராகிய உங்கள் அபிப்பிராயமும் கோரப்படுகிறது. ஆகவே இந்த இதழையோ அல்லது இந்தக் கதை அச்சாகியுள்ள பக்கங்களையோ பத்திரமாக வைத்திருக்கவும்.

ஆசிரியர், கல்கி

''ஆகட்டும்!'' என்று சொல்லி அவரிடம் நாலணாவைக் கொடுத்தேன்.

''அவசியம் நான் சொல்லியபடி செய்யுங்கள்! ஏதோ ஒரு பைத்தியம் உளறுகிறான் என்று நினைத்து அலட்சியமாக இருந்துவிடாதீர்கள். நீங்கள் எந்தச் சாமான் வேண்டுமானாலும் வாங்கலாம்; ஆனால் அதன் நிறம் பச்சையாக இருக்க வேண்டும்!''

என்னிடம் விடைபெற்றுக் கொண்டு அவர் போய் விட்டார்.

அவர் சொன்னதை அசை போட்டவாறே அங்கு சற்று நேரம் உட்கார்ந்திருந்தேன். ஜோசியர் அருகில் வந்தபோது உதித்திருந்த நம்பிக்கை இப்போது கொஞ்சம் கொஞ்சமாகக் கரையத் தொடங்கி விட்டது.

ஆனால்.... ஜோசியம் உண்மையாக இருந்தால்.... நிஜமாகவே எனக்கு அதிர்ஷ்டம் வந்து விட்டால்!..... நினைக்க நினைக்கப் பூரிப்பாக இருந்தது. ஒரு ரூபாயா, இரண்டு ரூபாயா? இலட்சம் ரூபாய்! அது மட்டும் கிடைத்து விட்டால்!.... மாதம் முந்நூற்றைம்பது ரூபாய்ச் சம்பளத்துக்குக் கல்கத்தாவில் லாட்டரியடிக்க வேண்டாம்! மாதக் கடைசியில் யாரிடம் கடன் கேட்கலாம் என்று இண்டாடித் திரிய வேண்டாம்! இந்த ஜன நெரிசல், ஒற்றையறைக் குடித்தனம், கல்கத்தாவுக்கே பிரத்தியேகமான குழப்பங்கள், அடிதடிகள் எல்லாவற்றுக்கும் ஒரேயடியாக முழுக்குப் போட்டு விட்டு... தஞ்சாவூர் ஜில்லாவில், காவிரிக் கரையில்...

கற்பனை மனத்துக்கு மிகவும் இதமாக இருந்தது. அதற்குப் பக்கபலமாக ஜோசியரின் கம்பீரமான தோற்றம்தான் என் மனக் கண்ணில் நிழலாடியது. அவர் நிச்சயம் பிச்சைக்காரன் இல்லை! அப்படியிருந்தால் நான் நாலணா கொடுத்ததும் வாங்கிக் கொண்டிருக்க மாட்டாரா? நிஜமாகவே அவர் ஒரு பெரிய ஜோசியராக இருக்கலாம்! எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ!

பச்சை நிறத்தில் என்ன பொருள் வாங்குவது என்று யோசித்துக்கொண்டே பூங்காவுக்கு வெளியே வந்தேன்.

பூங்கா வாசலில் ஒருவன் லாட்டரிச் சீட்டுகள் விற்பனை செய்து கொண்டிருந்தான். பூங்காவின் சுவரில் கட்டப்பட்டிருந்த கயிற்றிலிருந்து பல ராஜ்ய லாட்டரி விளம்பரங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. காற்றில் அழகாக ஆடிக் கொண்டிருந்த அவை தெருவில் செல்பவர்களை லாட்டரிச் சீட்டு வாங்க அழைத்துக் கொண்டிருந்தன. கண்ணைக் கவரும் நிறங்கள்!

சீட்டு விற்பனையாளனின் முன்னால் அடுக்கடுக்காக லாட்டரிச் சீட்டுக் கட்டுக்கள். முதற் பரிசு லட்ச ரூபாய், இரண்டு லட்ச ரூபாய், ஐந்து லட்ச ரூபாய், பத்து லட்ச ரூபாய்... கண்ணைப் பறிக்கும் பல வர்ணங்களில் சீட்டுக்கள்—வெள்ளை, ரோஜா, சிவப்பு, ஊதா, மஞ்சள், பச்சை...

சட்டென்று என் மூளையில் மின்னல் போல் எண்ணம் தோன்றியது. — ஒரு லாட்டரிச் சீட்டு வாங்கினால் என்ன? பச்சை நிறத்தில்!

பரபரப்புடன் பையைத் துழாவினேன்.

நல்ல வேளை! முழுசாக ஒரு ரூபாய் இருந்தது — அதற்கு அதிகமாகவும் இல்லை, குறைவாகவும் இல்லை!

நான் தினம் ஆபீசுக்குப் போகும்போது ஒன்றே கால் ரூபாய் எடுத்துக் கொண்டு போவேன். டிராம் செலவு, டிபன் செலவுக்காக. அன்று காலையில் டிக்கட் வாங்குவதற்குள் டிராம் நின்று விட்டதால் டிக்கட் வாங்கவேயில்லை. ஆகையால்தான் ஜோசியருக்குக் கொடுத்த நாலணா போகச் சரியாக ஒரு ரூபாய் என்னிடம் இருந்தது. இதுவும் எனக்கு வரப்போகும் அதிருஷ்டத்தின் அறிகுறிதான்!

காளியைத் தியானம் செய்து விட்டு அந்த ரூபாய்க்கு ஒரு பச்சைச் சீட்டை வாங்கினேன். அடுத்த வாரம் குலுக்கல்! பலே! அந்த ஜோசியர் உண்மையிலேயே பெரிய ஜோசியர்தான்.

லாட்டரிச் சீட்டைப் பையில் வைத்துக் கொண்டபோது ஒரு லட்ச ரூபாய்க்கான செக்கைப் பைக்குள் வைத்துக் கொள்வது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது எனக்கு. லட்ச ரூபாயா இலேசா! அதற்கேற்ற பொறுப்புணர்ச்சியும் கூடவே பிறந்தது. லட்சம் ரூபாயைச் சரியான முறையில் செலவு செய்யத் திட்டம் போட வேண்டாமா? பணம் வர இன்னும் ஒரு வாரம்தானே இருக்கிறது?...

விரிவாகத் திட்டமிடுவதற்காக மைதானத்தை நோக்கி நடந்தேன்.

மொத்தப் பணத்துக்கும் அடைவாக, பிசிர் இல்லாமல் திட்டம் போட வெகு நேரம் பிடித்தது. மைதானத்தை விட்டுக் கிளம்பும் போது நன்றாக இருட்டி விட்டது. மேலும் கையில் வேறு பணமில்லாததால் வீட்டுக்கு நடந்தே செல்ல வேண்டியதாயிற்று. அன்று பிற்பகலில் டிபன்கூடச் சாப்பிடவில்லை. இருந்தாலும் சீட்டு உருவத்தில் என் பையிலிருந்த லட்சம் ரூபாயின் நினைவு பசியையும் களைப்பையும் ஓட்டிவிட்டது. உற்சாகமாக வீட்டை நோக்கி நடந்தேன்.

வீடு சேர்ந்தபோது மணி ஒன்பதாகிவிட்டது. கல்யாணி கவலையோடு வாசலில் நின்று கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் அவள் முகம் மலர்ந்தது.

கல்யாணி ரொம்ப இங்கிதம் தெரிந்தவள். நான் வழக்கத்துக்கு மாறாக இவ்வளவு தாமதமாக வந்தது பற்றி எதுவும் கேட்காமலே அவசரம் அவசரமாக உணவு பரிமாறினாள். நான் சாப்பிடத் தொடங்கிய பிறகு மெதுவாகக் கேட்டாள், ''எங்கே போயிருந்தீர்கள்?, இன்று ஆபீசுக்குப் போகவில்லையா?... சாயங்காலம் கணேசன் உங்களைத் தேடிக்கொண்டு வந்தார்....''

நான் லட்சாதிபதியாகப் போகும் விஷயத்தை இப்போதே கல்யாணியிடம் சொல்லி விடலாமா... இல்லை யில்லை! பரிசு கிடைத்த பிறகு சொல்லி அவளை வியப்பில் ஆழ்த்த வேண்டும்!

''ஆமாம், ஆபீசுக்குப் போகவில்லை. ஒரு காரியமாக வேறோர் இடத்துக்குப் போயிருந்தேன்.''

சாப்பிட்டு முடிந்த பிறகுதான் குழந்தைகளின் அரவமே இல்லாதிருப்பதைக் கவனித்தேன். ''குழந்தைகள் எங்கே?''

''அவர்கள் அப்போதே சாப்பிட்டுவிட்டுத் தூங்கிப் போய் விட்டார்கள்.''

எனக்கு வெற்றிலை மடித்துத் தந்து கொண்டே கல்யாணி மெதுவாக ஆரம்பித்தாள்: ''நான் ஒண்ணு சொல்கிறேன், கோபித்துக் கொள்ள மாட்டீர்களே?''

''பெரிய பீடிகை போடுகிறாயே! என்ன விஷயம்?''

''ஒன்றுமில்லை.... அதாவது ஒன்றும் பெரிய விஷயமில்லை.... நம் பாபு பரீட்சையில் பெயிலாகப் போய் விட்டான்!... நீங்கள் அவனைக் கோபித்துக் கொள்ள வேண்டாம். சிறு பையன் ஏதோ விளையாட்டுத்தனமாக இருந்து விட்டான்...'' கெஞ்சும் குரலில் அவள் ஏதோ சொல்லிக் கொண்டு போனாள்.

கல்யாணி கெட்டிக்காரிதான். அவளுக்கு என் சுபாவம் தெரியும். எனக்குக் கோபம் சாதாரணமாக வராது. வந்தால் நிதானம் இழந்து விடுவேன். அதிலும் படிப்பு விஷயத்தில் நான் மிகவும் கண்டிப்பு. பாபு பெயிலானது தெரிந்தால் கோபத்தில் அவனை அடித்துக் குற்றுயிராக்கி விடுவேன் என்று அவளுக்குத் தெரியும். ஆகவேதான் பாபுவையும் சுமதியையும் நான் வருவதற்குள் தூங்கச் செய்து விட்டு மெதுவாக என்னிடம் விஷயத்தைத் தெரிவித்திருக்கிறாள்! நாளைக் காலைக்குள் என் கோபம் ஆறிவிடுமல்லவா!

## குறட்டை அன்பைக் குறிக்கிறதா?

சில மனிதர்கள் தூங்கும்போது, ''குர்...குர்...'' என்று குறட்டை விடுகிறார்கள். ஜெர்மன் நிபுணர்கள் மனிதனின் குறட்டைக்குப் பொருள் காண விலங்குகளின் நடத்தையைக் குறித்து ஆராய்ச்சி நடத்துகிறார்கள். இரை தேடும் விலங்குகளின் 'ஆவேச'க் குறட்டையையும் வீட்டில் வளர்கிற பூனையின் ''சாந்தமான'' குறட்டையையும் இவர்கள் சுட்டிக்



காட்டுகிறார்கள். இதே போன்று மனிதர்களின் மனத்தில் புதைந்துள்ள மன நிறைவு அல்லது ஆத்திரம் இவற்றைக் குறட்டை குறிக்கிறது என்கிறார்கள். அன்பும் மன நிறைவும் கொண்ட கணவன் அதனை மறைமுகமாகத் தெரிவிக்கும் முறை குறட்டையாக இருக்கிறது என்று ஜெர்மன் நிபுணர்கள் கருதுகிறார்கள். ஆராய்ச்சி இன்னும் தொடருகிறது.

- பூ.பி.எஸ்.

---

ஆனால் கல்யாணியின் முன்ஜாக்கிரதைக்கு அவசியமேயில்லை. ஏனென்றால் நான் மனத்தளவில் ஏற்கனவே லட்சாதிபதியாக ஆகி விட்டிருந்தேன். குமாஸ்தாவின் பிள்ளைக்குத் தான் படிப்பு முக்கியம். லட்சாதிபதியின் பிள்ளைக்குப் புதிதாகப் பணம் சம்பாதிக்க வேண்டிய தேவை என்ன? இருக்கிற பணத்தை நன்றாக நிர்வகிக்கத் தெரிந்து கொண்டால் போதாதா? ஏதோ கையெழுத்துப் போட, கடிதம் எழுத, தந்தி வந்தால் படித்துப் புரிந்து கொள்ள எவ்வளவு படிப்பு அவசியமோ அதுதான் ஏற்கனவே பாபுவுக்கு இருக்கிறதே!....

''பாபு பெயிலாகி விட்டானா? சரிதான், போனால் போகிறது! விட்டுத் தள்ளு!'' என்றேன் அலட்சியமாக.

நான் கோபத்தால் சீறுவேன் என்று எதிர் பார்த்த கல்யாணி மிகுந்த ஆச்சரியத்தால் திகைத்தாள்....

**கா**லையில் படுக்கையை விட்டு எழுந்ததும் பாபு உதை வாங்கிக் கொள்ளத் தன்னைத் தயார் செய்து கொண்டு என்னிடம் தயங்கித் தயங்கி வந்தான்.

''அப்பா! இனிமேல் நன்றாகப் படிக்கிறேன் அப்பா!''....

''சரி, போ!'' என்று அவன் முதுகில் செல்லமாகத் தட்டினேன்.

என் நடத்தையின் புதிரைப் புரிந்து கொள்ள முடியாமல் அவனும் திகைத்தான். பிறகு விளையாடப் போய்விட்டான்...

''என்ன கிட்டு! நேற்று ஏன் ஆபீசுக்கு மட்டம் போட்டுவிட்டீர்?'' என்று கேட்டுக் கொண்டே வந்தார் கணேசன்.

''வழியில் டிராம் நின்று போய்விட்டது. 'லேட்டாய்ப் போவானேன், ராவிடம் பேச்சுக் கேட்பானேன்' என்று பேசாமல் இருந்து விட்டேன்.''

'' அப்படியானாலும் கொஞ்சம் லேட்டானாலும் ஆபீசுக்குவந்திருக்கலாமே! விஷயத்தைச் சொன்னால் ராவ் கோபித்துக் கொள்ள மாட்டாரே. பாவம், அவர் நீங்கள் வராததால்

ரொம்பத் தவித்துப் போய் விட்டார். நேற்று ஏதோ கணக்கை முடித்துத் தருவதாகச் சொல்லியிருந்திராமே !''

''சொல்லி யிருந்தது வாஸ்தவம்தான் ! ஆனால் மனிதனுக்கு ஆபத்து, சம்பத்து கிடையாதா?'' என் குரலில் சற்றுச் சூடு ஏறிற்று. ''கணக்கை ஒரு நாள் தாமதமாக முடித்துக் கொடுத்தால் குடியா முழுகிவிடும்! இந்தச் சொன்னேக் காக முந்நூற்றைம்பது ரூபாய்க்கு ராவ் என்னேயே விலைக்கு வாங்கிக் கொண்டு விட்டாரோ? தவித்துப் போய் விட்டாராம்! தவிக்கட்டுமே ஒரு நாள்!''

இப்போது திகைக்க வேண்டியது கணேச னுடைய முறை!

பிறகு அவர் தம்மைச் சற்றுச் சமாளித்துக் கொண்டு என்னைச் சமாதானப்படுத்த ஆரம் பித்தார். ''இப்போது அவர் உம்மை ஒன்றும் சொல்லி விடவில்லையே! ஏனய்யா அலட்டிக் கொள்கிறீர்?.... அது சரி, நான் வந்த விஷ யம் என்னவென்றால்,..... வீட்டுக்காரிக்கு உடம்பு சரியில்லை.... மாதக் கடைசி. மருந்து வாங்க வேண்டும். கையில் காசில்லை. நீங்கள் அந்தப் பணத்தைக் கொஞ்சம் கொடுத் தால்...''

சோழியன் குடுமி சும்மா ஆடுமா? இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்னால் அவரிட மிருந்து ஓர் அவசரத்துக்காக ஐம்பது ரூபாய் கடன் வாங்கி யிருந்தேன். மறு மாதத்தில் திருப்பிக் கொடுத்து விடுவதாகத் தான் சொல்லியிருந்தேன். ஆனால் கொடுக்க முடியவில்லை. அதைக் கேட்கத்தான் இப் போது வந்திருக்கிறார் !

மாதக் கடைசியாம், மாதக் கடைசி!— மாதக் கடைசி இவருக்கு மட்டும்தானு; எனக் கில்லையா? இந்த அற்பத் தொகையைத் திருப் பிக் கேட்க வந்துவிட்டாரே!... எனக்கு எரிச் சல் எரிச்சலாக வந்தது.

''என்ன சார், உங்கள் பணத்தை எடுத்துக் கொண்டு ஓடியா போய்விடுவேன்? என் கையி லிருந்தால் நீங்கள் கேட்கும்படி வைத்துக் கொள்வேனு? இன்னும் ஒரு வாரம் பொறுத் துக்கொள்ளுங்கள், உங்கள் பிசாத்து ஐம்பது ரூபாயைக் கொடுத்து விடுகிறேன்! வேண்டு மானல் வட்டியும் தந்து விடுகிறேன். சரி தானே!''

என்னுடைய திடீர் ஆத்திரத்தைக் கண்டு கணேசன் செயலற்று நின்று விட்டார். அவர் முகத்தில் ஈயாடவில்லை. வேதனை தோய்ந்த குரலில் அவர், ''இட்டு, நீர் என்னைத் தவருக நினைத்து விட்டீர். இன்று உம்முடைய மனசு சரியில்லை போலிருக்கிறது. நான் கேட்டதற்கு வருத்தப்படாதீர். நான் வேறு எங்கே யாவது பணத்துக்கு ஏற்பாடு செய்துகொள் கிறேன்.'' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார்.

நான் நடந்து கொண்ட முறை கல்யாணிக் குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. கணேசன் சென்ற பிறகு அவள் என்னிடம் ''நீங்கள் ஏன் கணேசனிடம் இப்படிக் கோபமாகப் பேசினீர்கள்? பாவம், அவர் எவ்வளவு வருத் தப்படுவார்! நம்முடைய ஆபத்துக்கு உதவி செய்தாரே!...'' என்று ஆரம்பித்தாள்.

''சரிதான்! எனக்கு எல்லாம் தெரியும்! உன் வேலையைப் பார்!'' என்று சீறினேன்.

நாலைந்து நாட்களுக்குப் பிறகு ஒருநாள்..

கல்கத்தாவில் சாதாரணமாகக் குளிர்காலத் தில் மழை பெய்வதில்லை. ஆனால் அன்று மாலை சுமார் நான்கு மணிக்குத் திடீரென்று வானம் இருண்டு போய் மழை கொட்டோ கொட்டு என்று ஒரு மணி நேரம் கொட்டித் தீர்த்து விட்டது. மழை நின்றபிறகும் சிறு தூற்றல் தொடர்ந்தது. எவ்வளவு நேரம் ஆபீஸிலேயே உட்கார்ந்திருப்பது? நானும் கணேசனும் வீட்டுக்குப் புறப்பட்டோம்.

ரஸ்தாவெங்கும் ஜல வெள்ளம். டிராம் லைன் நீரில் மூழ்கிக் கிடந்ததால் டிராம்கள் நின்று போயிருந்தன.

தலை நனையாமல் இருப்பதற்காகக் கைக் குட்டையை எடுத்துத் தலையில் சுற்றிக்கொண் டேன். நடக்க வசதியாக இருப்பதற்காகக் கால் சட்டையை முழங்கால் வரை தூக்கி மடித்துக் கொண்டேன். ஷூவைக் கையில் எடுத்துக் கொண்டு நடந்தேன்.

ரஸ்தாவில் நடப்பதிலும் சிரமம் இல்லாமல் இல்லை. பெரிய இரண்டடுக்கு பஸ்கள் வேக மாகத் தண்ணீரைக் கிழித்துக் கொண்டு போகும்போது அவை வாரியடித்த தண்ணீரி லிருந்து தப்புவதற்காக ஓரத்தில் ஜாக்கிரதை யாக ஒதுங்க வேண்டி யிருந்தது. அப்படியும் அவை கிளப்பிவிட்ட தண்ணீர் அலையலை யாகக் கிளம்பி முழங்காலுக்கு மேல் வந்து கால் சட்டையை நனைத்தது.

முதலாவது ஒரு பெரிய கார் என்மேல் தலையிலிருந்து கால்வரையில் சேற்றுத் தண்ணீ ரைத் தாராளமாக வாரி இறைத்த சத்தம்! இரண்டாவது காரை ஓட்டி வந்த அதன் சொந்தக்காரி என் அபிஷேக நிலையைக் கண்டு சிரித்த ஏளனச் சிரிப்பின் ஒலி! மூன்றாவது, எரிச்சல் தாங்காமல் நான் அவளுக்குக் கொடுத்த சாபம்!

கணேசன் ஓடி வந்து அனுதாபத்துடன் என் முகத்தைத் தம் கைக் குட்டையால் துடைத்தார். இன்னும் ஆத்திரம் தீராமல் பொருமிக் கொண்டிருந்த என்னைச் சமா தானப்படுத்தினர். ''சரிதான், விட்டுத் தள்ளுமையா! அவளுக்குப் பணத் திமிர்! பணம் வரும்போது இந்தத் திமிரும் கூடவே வந்துவிடும். பணம் படைத்தவர்களிடம் ஈவு, இரக்கம், அனுதாபம் இதெல்லாம் இருக் காது! ஆகையால் அவர்களைக் குற்றம் சொல் லிப் பயனில்லை. வாரும் போகலாம்!'' என்று கூறி என்னை அழைத்துக்கொண்டு நடந்தார்.

குழந்தைகள் சாப்பிட்டுவிட்டுத் தூங்கிப் போய்விட்டார்கள். எனக்கு நான்கு மைல் தூரம் ஈர உடையுடன் நடந்து வந்த அலுப் பிலும் தூக்கம் வரவில்லை. கல்யாணி இன்னும் சமையலறையில் வேலையாக இருந்தாள்.

சீட்டுக் குலுக்க இன்னும் இரண்டு நாட் களே இருந்தன. என்னுள்ளே ஒரு பரபரப்பு; வரவிருக்கும் பணப் பொறுப்பைச் சரிவர நிர்வகிக்க வேண்டுமே என்ற கவலை; பல வகைச் சிந்தனைகள், திட்டங்கள்....

முன்பே கட்டி வைத்திருந்த கோட்டையை மானசீகமாகச் சுற்றி வந்து மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தேன்.

கல்யாணி அறைக்குள் நுழைந்ததையும் என் அருகில் வந்து உட்கார்ந்ததையும் நான்



# வீட்டையே ஏன் பாங்காக வைத்திருக்கிறீர்கள்? யுகோபாங்கில் பணத்தைப்போடுவது அதிக பாதுகாப்புடையது, லாபகரமானது!

யுகோபாங்க் டிபாஸிட் கணக்கில் நீங்கள் போடும் பணத்திற்கு வட்டி கிடைக்கிறது. விவசாயம் சிறு தொழில்கள், ஏற்றுமதி இவற்றை அபிவிருத்தி செய்ய அது உதவுகிறது. அது இந்தியாவின் பொருளாதார, வேலை வாய்ப்பு பிரச்னைகளுக்குத் தீர்வு காண மிக இன்றியமையாதது. யுகோபாங்க் மூலம் உங்கள் பணத்தை புழங்கவிட்டு வளம் பெருகுவதற்கு உதவுங்கள்.




தலைமை ஆபீஸ் : கல்கத்தா

கவனிக்கவில்லை. ஆகவே அவள் திடீரென்று தன் முகத்தை என் மார்பில் புதைத்துக் கொண்டு கேவிக் கேவி அழத் தொடங்கிய போது நான் திடுக்கிட்டுப் போனேன்.

"என்ன கல்யாணி! ஏன் அழுகிறாய்?"

இன்னும் பலமாக அழத் தொடங்கினாள் அவள். பிறகு ஒருவாறு தன்னைச் சமாளித்துக்கொண்டு விம்மினாள். "என்ன விஷயம் என்று புரியாமல்தான் அழுகிறேன். கொஞ்ச நாட்களாக நீங்கள் மாறிப் போய்விட்டீர்களே! உங்களுக்கு என்ன நேர்ந்து விட்டது சொல்லுங்கள்!"

என்னிடம் மாறுதலா? இவள் என்னிடம் என்ன மாறுதலைக் கண்டு விட்டாள்? அதுவும் நான் லாட்டரிச் சீட்டு வாங்கியிருப்பது பற்றியும், லட்சாதிபதியாகப் போவது பற்றியும் அவளிடம் ஜாடைமாடையாகக்கூட ஒன்றும் சொல்லவில்லையே!

"நீ என்ன சொல்கிறாய் கல்யாணி? நான் எப்போதும் போல்தான் இருக்கிறேன்!..."

"இல்லை! நீங்கள் நிச்சயமாக மாறியிருக்கிறீர்கள். எப்போதிலிருந்து தெரியுமா? அன்றொரு நாள் ஆபீசுக்குப் போகாமல் எங்கோ சுற்றிவிட்டு நேரம் கழித்து வீடு திரும்பினீர்களே, அன்று முதல்! உள்ளூற உங்களை ஏதோ ஒன்று அரித்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் முன்மாதிரி சிரித்துப் பேசுவதில்லை; அயர்ந்து தூங்குவதில்லை. இரவு முழுவதும் புரண்டு புரண்டு படுக்கிறீர்கள். அப்படியே தூங்கினாலும் தூக்கத்திலேயே ஏதேதோ உளறுகிறீர்கள். உங்களுக்கு என்ன கவலை? என்னிடம்கூடச் சொல்லக் கூடாதா?"

எனக்குச் சிரிப்பு வந்து விட்டது. "சரிதான்! நீ துப்பறியும் இலாகாவில் இருக்க வேண்டும் கல்யாணி! மனிதனுக்கு ஏதோ சில நாட்கள் தூக்கம் வராமல் இருக்கக் கூடாதா? இதை வைத்துக் கொண்டு கற்பனை பண்ணிக் கொண்டிருக்கிறாயே?"

"நான் ஒன்றும் கற்பனை செய்யவில்லை; நீங்கள்தான் மழுப்பப் பார்க்கிறீர்கள்! நீங்கள் இந்தச் சில நாட்களுக்குள் அடியோடு மாறியிருக்கிறீர்கள்... முன்பெல்லாம் பாபுவின் படிப்பு விஷயத்தில் எவ்வளவு கண்டிப்பாக இருப்பீர்கள்! 'நமக்கெல்லாம் படிப்புத் தாண்டா முக்கியம்!' என்று அடிக்கடி சொல்வீர்களே! பாபு பெயிலான விஷயத்தை நான் உங்களிடம் பயந்து கொண்டே சொன்னேன். நீங்கள் எங்கே நிதானமிழந்து அவனைக் கடுமையாக அடித்து விடுவீர்களோ என்று என் மனம் அடித்துக் கொண்டது. நீங்கள் என்ன செய்தீர்கள்? 'போனால் போகட்டும் போடா!' என்று செல்லமாகத் தட்டிக் கொடுத்தீர்கள்! இது மாறுதல் இல்லையா? இப்போது பாபுவுக்குத் துளிர்த்துப் போய் விட்டது. நாள் முழுதும் விளையாட்டும் ஆட்டமும்தான்; படிப்பே இல்லை. அவனைப் படிக்கச் சொன்னால், 'அப்பாவே என்னை ஒன்றும் சொல்வதில்லை. நீ ஏனம்மா அலட்டிக்கொள்கிறாய்?' என்று எனக்குப் புத்தி சொல்கிறான்! அப்படியே விட்டுவிட்டால், அவன் வெறும் சோதாவாக, போக்கிரியாகப் போய் விடுவான்!..."



## உருளைக் கிழங்கு யுத்தம்!

1778ம் ஆண்டு மாமன்னரான ப்ரெடரிக் ஆஸ்திரியா நாட்டின் மீது படையெடுத்தார். அந்தப் போர் இரண்டாண்டு காலம் தொடர்ந்து நடந்தது. அப்போர் "பவேரிய வாரிசு உரிமைப் போர்" என்று ஐரோப்பிய வரலாற்றில் குறிப்பிடப்படுகிறது. ஆனால் ஐரோப்பியப் பொதுமக்களிடையே இந்தப் போருக்கு என்ன பெயர் தெரியுமா? 'உருளைக் கிழங்கு யுத்தம்' என்பதுதான். தாங்கொணாக் கடும் குளிர் ஒருபுறம்; ராணுவ வீரர்களின் முக்கிய உணவான உருளைக் கிழங்குகளின் பற்றாக்குறை ஒருபுறம்; இப்படி இருபுறத் தாக்குதலால் மிகவும் அவதிக்கு உள்ளானவர்கள் ருஷியர்கள்தான். போதுமான உருளைக் கிழங்கு மட்டும் அப்பொழுது கிடைத்திருந்தால் அந்த நீண்ட காலப் போரில் அவர்கள் தோற்றிருக்க மாட்டார்கள். சரித்திரப் பேராசிரியர்கள் ஐரோப்பாவின் சரித்திரத்தையே வேறு விதமாக எழுத நேர்ந்திருக்கும்.

ஆதாரம்: காரவெட்          நகல்: விஜயம்

"ஏதோ அவன் விஷயத்தில் கொஞ்சம் அசிரத்தையாக இருந்திருப்பேன். அதற்காக..."

"அதற்காக மட்டும் இல்லை! இன்னும் எவ்வளவோ இருக்கிறது!... கணேசன் நம்முடைய ஆபத்துக் காலத்தில் நமக்கு உதவி செய்தாரே! அவரை எவ்வளவு உதாசீனமாகப் பேசினீர்கள் அன்று! அவருக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டிய பணத்தை முன்னேயே கொடுக்காதது நம் குற்றம். அதற்காக நாம் வெட்கப்பட வேண்டியிருக்க, அதற்கு மாறாக அவர் மேல் சீறி விழுந்தீர்களே! கொடுத்த பணத்தைத் திருப்பிக் கேட்பது குற்றமா? அதுவும் என்ன அவர் பெரிய பணக்காரரா? நம்மைப் போல் குறைந்த சம்பளம் வாங்குபவர்தானே? அந்த நல்ல மனிதரை என்ன பேச்சுப் பேசினீர்கள்!"

"என்மேல் தப்புத்தான்!" என்று மென்று விழுங்கினேன்.

"அது மட்டுமா? பத்து வருஷங்களுக்கு முன்னால் நாம் கல்கத்தாவுக்கு வந்தோமே அது ஞாபகமிருக்கிறதா உங்களுக்கு? அப்போது பாபு குழந்தை. நீங்கள் மாதக் கணக்காக வேலை கிடைக்காமல் அலைந்தீர்கள். இனிமேல் பட்டினி கிடக்க வேண்டியதுதான் என்ற நிலை ஏற்பட்டபோது ராய் உங்கள் மேல் பரிதாபப்பட்டுத் தம் கம்பெனியில் ஒரு வேலை போட்டுக் கொடுத்தாரே! அதுவும் வேலை ஒன்றும் காலி இல்லாமலிருந்தும் தம் செல்வாக்கால் உங்களுக்காக ஒரு வேலையை உண்டாக்கிக் கொடுத்தாரல்லவா? அவரைப் பற்றிக் கூட எவ்வளவு அலட்சியமாகப் பேசினீர்கள்! இதெல்லாம் மாறுதல் இல்லையா? எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது. உங்களுக்

குள்ளே ஒரு சைத்தான் புகுந்திருக்கிறான்! அதனால்தான் நீங்கள் நீங்களாகவே இல்லை. இப்போதெல்லாம் நீங்கள் நேரத்துக்கு ஆபீஸ் போவதில்லை. வேண்டுமென்றே பத்து மணிக்கு மேல் சாவகாசமாகக் கிளம்புகிறீர்கள். நாம் சம்பளத்துக்கு வேலை பார்க்கும் இடத்தில் இப்படியெல்லாம் அடாவடித்தனம் செய்யலாமா?'' கல்யாணி மடை திறந்தாற்போல் பேசிக் கொண்டே போனாள்.

ஆம்! அவள் சொல்லியது உண்மைதான்! நான் என்னையறியாமலே மாறியிருக்கிறேன். இம்மாறுதல் கல்யாணியின் கண்களுக்குத் தப்பவில்லை! ஆனால் ஏழைக் குமாஸ்தா லட்சாதிபதியாக ஆகும்போது மாறாமல் இருக்க முடியுமா? நான் லாட்டரி சீட்டு வாங்கியிருக்கும் விஷயத்தைச் சொல்லாமல் இதை எப்படி அவளுக்கு விளக்குவது?

''கல்யாணி! நான் மாறவுமில்லை, ஒன்றுமில்லை! நீதான் அனாவசியமாக ஏதேதோ கற்பனை செய்து கொண்டு அலட்டிக்கொள்கிறாய். ஆனால் ஒன்று. நான் மாறாமலே இருப்பேனென்று என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. எனக்குத் திடீரென்று லட்ச ரூபாய் கிடைக்கிறதென்று வைத்துக்கொள்ளேன்! அதன் பிறகும் என்னால் இப்போது மாதிரியே இருக்க முடியுமா?''

''உங்களுக்கு எங்கிருந்து லட்ச ரூபாய் கிடைக்கும்?''

''லாட்டரியில் முதல் பரிசு கிடைக்கிறதென்று வைத்துக் கொள்....''

''இதோ பாருங்கள்! நமக்கு லாட்டரியும் வேண்டாம், பாட்டரியும் வேண்டாம்! அந்தப் பணம் வந்து நீங்கள் மாறிப் போகவும் வேண்டாம். இரண்டு வேளை சாப்பாடு சாப்பிட்டு, மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளத் தேவையான உடை உடுத்த நீங்கள் சம்பாதிப்பது எனக்குப் போதும். அதற்கு மேல் வீடு, வாசல், நிலம், நகை, கார் எதுவும் நமக்கு வேண்டாம். உங்கள் சம்பாத்தியத்துக்குள் நம் குடும்பம் நடத்துவது என் பொறுப்பு; சரிதானே! நான் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். நீங்கள் நீங்களாகவே இருங்கள்! நீங்கள் நீங்களாக இல்லாவிட்டால் அதற்குப் பதிலாக எவ்வளவு பணம் கிடைத்தாலும் அது குப்பை!''

அவளுடைய உறுதியைக் கண்டு எனக்குப் பிரமிப்பாக இருந்தது. பேதைமைக்கும், பேராசைக்கும் பலவீனத்துக்கும் உதாரணமாகப் பெண்களைச் சொல்வார்களே, அவர்களிடையே கல்யாணியைப் போல் சிலர் இருக்கிறார்களா?

''நான் மாறவே மாட்டேன். நீ கவலைப்படாமல் தூங்கு!'' என்று அவளைத் தேற்றினேன்.

என்னைத் தழுவிக் கொண்டே அவள் சற்று நேரத்தில் கண்ணயர்ந்து விட்டாள். என் மேல் அவளுக்கு எவ்வளவு நம்பிக்கை!

எனக்குத்தான் தூக்கம் வரவில்லை. கல்யாணி கூறியதை நினைக்க நினைக்க எனக்குத் திகைப்பும் பயமுமாக இருந்தது. என்னுள்ளே நிஜமாகவே ஒரு சைத்தான் புகுந்து விட்டானா? பணம் கிடைப்பதற்கு முன்னாலேயே நான் நன்றி மறந்த கயவனாக மாறி விட்டேனே! ''பணம் வரும்போது திமிரும் கூடவே வந்துவிடும்! பணம் படைத்தவர்களிடம் ஈவு, இரக்கம், அனுதாபம் இதெல்லாம் இருக்காது'' என்று கணேசன் அன்று மாலையில் கூறியது நினைவுக்கு வந்தது. லட்சம் ரூபாய் கைக்கு வந்த பிறகு இன்னும் எவ்வளவு மாறிவிடுவேனோ!... கல்யாணிக்கு, நான் நானாகவே இருக்க வேண்டுமாம்! விளைவுகளை யோசிக்காமல் லாட்டரிச் சீட்டை அசட்டுத்தனமாக வாங்கி விட்டேனே!

'' நீங்கள் நீங்களாக இல்லாவிட்டால் பணத்தால் என்ன பிரயோசனம்?'' என்றாள் கல்யாணி. எனக்குப் பைபிளின் வாசகம் ஒன்று நினைவு வந்தது — ''கடல் தன் உவர்ப்புத் தன்மையை இழந்துவிட்டால் எதைக் கொண்டு அதை மீண்டும் உவர்ப்பாக்க முடியும்?''...நான் பணத் திமிரால் என் மனிதாபிமானத்தை இழந்து விட்டால்பிறகு நான் மனிதனாவது எப்படி?

நான் கல்யாணியின் கைகளை மெதுவாக என்மேலிருந்து விலக்கிவிட்டுப் படுக்கையை விட்டு எழுந்து வந்தேன். சட்டைப் பையிலிருந்த லாட்டரிச் சீட்டை எடுத்துச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து ஜன்னல் வழியே வெளியில் எறிந்துவிட்டுத் திரும்பி வந்து படுத்துக் கொண்டேன்.

அன்று நல்ல, ஆழ்ந்த, கனவுகளில்லாத தூக்கம்.

* * *

காலையில் காப்பி சாப்பிட்டதும் பாபு, பந்தை எடுத்துக் கொண்டு விளையாடக் கிளம்பினான். எனக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. ''ஏண்டா ராஸ்கல்! விடிந்ததும் விடியாததுமாக என்னடா விளையாட்டு! போன தடவைதான் பெயிலாகி விட்டாய்; இந்த வருஷமாவது பாஸ் செய்ய வேண்டாம்? போய்ப் புத்தகத்தை எடுத்து வைத்துப் படிடா கழுதை!'' என்று அதட்டினேன்.

சோற்றைப் பறக்கப் பறக்க அள்ளிப் போட்டுக் கொண்டு ஒன்பதேகால் மணிக்கே ஆபீசுக்குப் புறப்பட்டுவிட்டேன்.

ஒரு நாள் நானும் கணேசனும் ஆபீசிலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்தோம். எங்கள் டிராம் பவானிப்பூர் பார்க்கைக் கடந்து கொண்டிருந்தது.

கணேசன் சொன்னார், ''ஒரு விஷயம் கேட்டீரா, கிட்டு? இந்தப் பூங்கா வாசலில் ஒருவன் லாட்டரிச் சீட்டு விற்கிறானே, போன மாதம் அவன் விற்ற சீட்டு ஒன்றுக்கு லட்ச ரூபாய் முதல் பரிசு விழுந்திருக்கிறதாம்! ஆனால் பாரும், சீட்டு வாங்கிய ஆள் இன்னும் பரிசு வாங்கிக் கொள்ள வரவில்லையாம்! அவனுக்குக் கைக்கு எட்டியும் வாய்க்கு எட்டவில்லை, பார்த்தீரா? அந்த ஆள் சரியான அதிர்ஷ்டக் கட்டை, பாவம்!''

''அது எப்படி அவனை அதிர்ஷ்டக்கட்டை என்கிறீர்கள்?'' நான் நிதானமாகக் கேட்டேன். ''பரிசு வாங்கிக் கொள்ளாததே அவனுடைய அதிர்ஷ்டமாகவும் இருக்கலாமே!''

கணேசன் என்னை 'ஒரு மாதிரி'யாக உற்றுப் பார்த்தார். திடீரென்று எனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ என்று நினைத்திருப்பார், பாவம்!

# நிபுணர்கள் சார்!

**முகுந்தன்**

"**இ**ன்னும் எத்தனை மைல்?" என்று விசாரித்தார் சாட்டர்ஜி.

"பதினெட்டே மைல்... அரை மணியில் போய்ச் சேர்ந்துவிடலாம்" என்று பதிலளித்த விக்ரம் சிங், தமது வழக்கப்படி கோட்டுப் பாக்கெட்டிலிருந்து சின்னஞ் சிறு 'டயரி'யை எடுத்து, அதிலே கவிதை தீட்டத் தொடங்கிவிட்டார். கவிதை யென்றால் அவருக்கு உயிராம். நிறையப் படித்துப் படித்துக் கவிதை எழுதும் ஆற்றலும் வந்துவிட்டதென்று சொல்லிக் கொண்டார். தமது கூற்றை நிரூபிப்பதற்காகவோ என்னவோ, அடிக்கடி 'டயரி'யில் சில வரிகளைக் கிறுக்கிக் கொண்டுவிட்டு, எங்களைப் பார்த்துப் புன்முறுவல் பூப்பார்.

"அது என்ன உமக்கு மட்டும் வரி வரியாகக் கற்பனை உதிக்கிறது?... மற்றவர்களைப் போல் ஒரே 'ஸிட்டிங்'கில் உம்மால் கவிதை எழுதவே முடியாதா?..." என்று கேட்டார் பாஸ்கரப் பணிக்கர் ஒரு முறை விக்ரம் சிங்கிடம்.

"என்னெ(ப்)பண்ணுவது? நான் சர்க்கார் உத்தியோகத்தில் அல்லவா இருந்தேன்?... அங்கே எப்படியெல்லாம் படிப்படியாக—மெதுவாக— நகருமோ அதேபோலத்தான் என் கவிதா சக்தியும் அமைந்திருக்கிறது" என்று சொல்லிவிட்டுப் பெரிதாக 'ஜோக்' அடித்து விட்ட மாதிரி சிங் சிரித்தார். நாங்களும் சிரித்தோம்; 'ஜோக்'குக்காக அல்ல; சிங்குக்காக. பாவம், மனிதர் இந்தப் பத்து நாட்களில் எங்களுக்காக எவ்வளவு பாடுபட்டிருப்பார், எங்கள் தேவைகளைக் கவனித்துக்கொள்ள எத்தனை சிரமப்பட்டிருப்பார்!

நாங்கள் யாரென்று சொல்லவில்லையே!... பத்திரிகைக்காரர்கள். திடீர் திடீரென்று நம் அரசாங்கத்துக்கு ஒரு வேகம் பிறக்கும்; நாட்டின் மூலை முடுக்கிலே கிடக்கிற பத்திரிகையாளர்களைத் திரட்டுவார்கள்; அவர்களை ஒரு 'லக்ஸரி பஸ்'ஸுக்குள் திணித்துத் துணைக்கு ஓர் அதிகாரியையும் சேர்த்துவிட்டு, நாட்டில் ஏற்பட்டிருக்கிற முன்னேற்றங்களைப் பார்வையிடுவதற்கு ஏற்பாடு பண்ணுவார்களல்லவா? அதேபோல இப்போதும் செய்திருந்தார்கள். இந்தத் தடவை அணைக்கட்டுகளையோ, பெரிய பெரிய தொழிற்சாலைகளையோ காட்டாமல், பசுமைப் புரட்சி சம்பந்தப்பட்ட சில இடங்களைப் பார்வையிட்டு வருவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். பணிக்கர், ரெட்டி, சின்ஹா, தேஷ்பாண்டே, சாட்டர்ஜி என்று எல்லோரும் அந்த '40 ஸீட்டர்' பஸ்ஸுக்குள் ஒரு வாரம் போல் அடைந்து கிடக்க நேர்ந்த காரணம் இதுதான்.

நம் ஊரில்தான் ஏடிடி—27, கோ—26, ஐ ஆர்—18 என்று பெயர் சூட்டுகிறார்கள் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் வடக்கிலும் வீரிய கோதுமைக்கு இப்படியெல்லாம் பெயர் தந்திருக்கிறார்கள் என்று தெரிந்து கொண்டேன். ஒரு வித்தியாசம்: மந்திரிகளின் பெயர் எந்த விதைக்கும் சூட்டப்படவில்லை. காரணம் கேட்டேன். "இங்கேதான் எந்த மந்திரிசபை எப்போது கவிழுமோ, யார் கட்சி விட்டுக் கட்சி தாவுவார்களோ என்று நிச்சயமற்ற சூழ்நிலையாக இருக்

கிறதே! நாற்காலியைக் காப்பாற்றிக் கொள்வதில் கவனம் போதுமா, பெயர் சூட்டுவதில் புத்தி போதுமா?'' என்று கூறினார் ஸின்ஹா.

கோதுமை வயல்கள், வீரியச் சோளக் கொல்லைகள், விதைப் பண்ணைகள் என்று ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டு வந்தவர்களிடம், ''அடுத்தபடி நாம் ராஜஸ்தான் பாலைவனத்துக்குப் போகிறோம்!'' என்று பெரிய வெடிகுண்டைத் தூக்கிப் போட்டார் விக்ரம் சிங்.

''அங்கே என்ன இருக்கிறது, மணல்காட்டைத் தவிர?'' என்று கேட்டோம்.

''மணற்காடாவது ஒன்றாவது? பாடப் புத்தகங்களில் படித்திருப்பதை வைத்துக் கொண்டு இப்படிச் சொல்கிறீர்கள்... இப்போது பாலைவனம் நிஜமாகவே சோலைவனமாக உருமாறியிருக்கிறதாக்கும்... தோப்புத் துரவுகள், தோட்டங்கள் — ஒரே பசுமைதான் போங்கள்!''

''நிஜமாகவா?''

''நீங்கள்தான் பார்க்கப் போகிறீர்களே! மிஸ்டர் பணிக்கர், உங்கள் ஊரில்தான் தென்னை மரங்கள் அதிகம் என்று பெருமைப் பட்டுக் கொள்வீர்கள் அல்லவா? இனி அது நடக்காது!...''

''ஏன்?''

''ராஜஸ்தான் பாலை நிலத்திலே தென்னைச் சாகுபடி செய்திருக்கிறோம் ஐயா... அற்புதமாக வளர்ந்திருக்கிறது!...''



''நிஜமாகவா! நம்பியில்தான் யாரோ ஒரு விவசாயி தென்னையை வளர்த்துப் பயிராக்கினார் என்று படித்தேன்... இங்கே கூடவா?...''

''அந்தச் சாதனையைத் தூக்கிச் சாப்பிட்டு விட்டார்கள் இங்கே. தென்னை மட்டுமா: பூசணி, பரங்கி, வெள்ளரிக்காய் — எல்லாம் பயிர் பண்ணி விருக்கிறார்கள்...''

''அப்படியா?...''

''நான் சொல்வானேன்? நீங்களேதான் எல்லாவற்றையும் பார்க்கப் போகிறீர்களே!''

பொட்டல்வெளியான ஓர் இடத்தில் வண்டி போய் நின்றது. எல்லோரும் இறங்கினோம். காலை பத்து மணியைத்தான் கடிகாரம் காட்டியதென்றாலும், பகல் பன்னிரண்டு மணி போல் வெயில் தகித்தது. போதாததற்குக் காற்று வேறு மணலை அப்படியே சுருட்டிக் கொண்டு வந்து தெளித்தது. மூக்கையும், வாயையும் கைக்குட்டைகளால் பொத்திக் கொண்டு விக்ரம் சிங்கைப் பின் தொடர்ந்தோம்.

புதை மணலில் இரண்டு பர்லாங் தூரம் நடந்து சென்றபிறகு திடுமென்று பசுமை புலப்பட்டது கண்களுக்கு. சோலை ஐயா, சோலை! அத்தனை பேருக்கும் ஒரே ஆச்சரியம், இதென்ன இந்திர ஜாலம் என்று!...

''வாருங்கள்!'' என்று நெஞ்சை நிமிர்த்திக்கொண்டு 'சர்க்காரி பண்ணை' என்று பெயர்ப் பலகை மாட்டியிருந்த ஓர் இடத்துக்கு அழைத்துச் சென்றார் விக்ரம் சிங்.

ஜோகிந்தர் என்பவர் எங்களை அங்கு எதிர்கொண்டு அழைத்தார்.

பார்த்தோம் சுற்றுமுற்றும். விக்ரம் சிங் சொன்னது வார்த்தைக்கு வார்த்தை உண்மைதான். சாம்பல் பூசிக் கொண்டு பூசணிக் காய்கள், தளதளவென்று மினுக்கிக்கொண்டு பரங்கிக் காய்கள்; கொத்துக் கொத்தாகத் திராட்சை.

"எந்தா! எந்தா!..." என்று பணிக்கருக்கு ஒரே ஆச்சரியம். தென்னை மரத்தைப் பார்த்துப் பார்த்து வியந்து போனார். ஒரு மரத்தைப் பிடித்து அவர் அசைத்த அசைப்பில் அவருடைய அவநம்பிக்கை புலப்பட்டது. "சர்க்கார் செய்கிற காரியங்களை நம்பவே கூடாது. எங்கே விருந்தாவது மரத்தைக் கொண்டு வந்து நமக்குக் காட்டுவதற்காகப் புதைத்து வைத்திருந்தாலும் வைத்திருப்பார்கள்!" என்று என் காதோடு கிசுகிசுத்தார். ஆனால் அவர் நினைத்தபடி இல்லை. தென்னை மரம் நிஜமாகவே அங்கே வளர்ந்திருந்தது.

"இந்தாருங்கள்" என்ற குரல் கேட்டுத் திரும்பினோம். விக்ரம் சிங் கையிலே சின்னஞ்சிறு ஓலைத் தட்டுக்கள். ஒவ்வொன்றிலும் தர்பூஸ் பழத் துண்டுகள், திராட்சைப் பழங்கள். சாப்பிட்டோம். "ருசியாகத் தானே இருக்கிறது?" என்றார் தேஷ்பாண்டே. "இதையும் சாப்பிடுங்கள்!" என்று கண்ணாடி டம்ளர்களில் இளநீரைக் கொண்டு வந்து கொடுத்தார் ஜோகிந்தர்.

"எல்லாம் இந்தத் தோட்டத்தில் விளைந்தவையா?..." என்று ரெட்டி கேட்டதற்கு ஜோகிந்தரை முந்திக் கொண்டு பதிலளித்தார் விக்ரம் சிங்.

**ப**ண்ணையைச் சுற்றிப் பார்த்ததில் ஓர் அகரப் பசி எங்களுக்கு. அதைப் புரிந்து கொண்டு விக்ரம் சிங் பஸ்ஸைப் பக்கத்தில் உள்ள ஒரு ஹோட்டலுக்கு விடச் சொன்னார். நாங்கள் ஒரு பிடி பிடிக்கத் தயாரானோம். 'பொத்துப் பொத்'தென்று தட்டில் வந்து விழுந்தது வறட்டுச் சப்பாத்தி. கிண்ணங்களில் 'தால்' எடுத்து வந்து 'டங், டங்' கென்று ஆளுக்கொன்று வைத்துவிட்டுப் போனான் ஹோட்டல் பணியாள்.

பசியெல்லாம் பறந்தோடிவிட்டது எனக்கு. பணிக்கர் என்னைப் பரிதாபமாகப் பார்த்தார். விக்ரம் சிங் சப்பாத்தியைக் கிழித்து வாயில் திணித்து மெல்லத் தொடங்கினார்.

மறுபடியும் ஸர்வர் சப்பாத்தித் தட்டுடன் வந்தான். விக்ரம்சிங் தட்டில் ஒரு பொத்! தேஷ்பாண்டே தட்டில் ஒரு பொத்! அடுத்தாற்போல் என் தட்டு. அவன் தயங்கினான். "தபீயத் டீக் நஹீன் ஹை க்யா?" என்று கேட்டான்.

"தடியை முழுங்கின மாதிரிதான் இன்னுன்னு இருக்கு தேகம். உடம்புக்கு ஒண்ணும் கெடு இல்லே. நாக்குத்தான் செத்துப் போச்சு! இங்கேதான் தேங்காய் நிறைய விளையுதே! ஒரு தேங்காய்த் துவையல் அரைக்கக்கூடாதா? அதுதான் பண்ணத் தெரியாது என்றால் காய்கறிதான் ஏராளமாய் விளையுதே, சர்க்காரி பண்ணையில். ஒரு கூட்டு தயாரிக்கக் கூடாதா?" என்று அரைகுறை ஹிந்தியில் அழுத்துக் கொண்டேன்.

ஸர்வர் பையன் என்னை மேலும் கீழுமாகப் பார்த்தான். "சர்க்காரி பண்ணையில் நாங்கள் காய்கறி வாங்கிச் சமைத்தால் ஒரு சாப்பாடு பத்து ரூபாய் ஆகும். கொடுப்பீர்களா? இப்போ நீங்கள் ஒன்னரை ரூபாய்க்குச் சாப்பிடுகிறீர்களே!" என்றான்.

"ஏன் அப்படி?"

"இது தெரியாதா? என்ன பத்திரிகைக்காரர்கள் ஐயா நீங்கள்? பண்ணையைப் பார்த்துவிட்டுத்தானே வருகிறீர்கள்? அங்கே விளையும் ஒரு தேங்காயின் விலை எட்டு ரூபாய்! ஒரு கத்தரிக்காய் மூன்று ரூபாய்! ஒரு பூசணி ஐந்து ரூபாய்!....." இப்படி அடுக்கிக் கொண்டே போனான் ஹோட்டல் சர்வர்.

நாங்கள் விக்ரம்சிங்கை முறைத்துப் பார்த்தோம். எல்லார் கண்களிலும் இருந்த கோப வெறி அவரைப் பயமுறுத்திவிட்டது. இலேசாக நடுங்கியபடியே, "பின்னே இருக்காதா, ஸார்? பாலைவனத்தைச் சோலை வனமாக்குவதென்றால் சும்மாவா? எத்தனை இஞ்ஜினியர்கள், எத்தனை ஐ. ஏ. எஸ். அதிகாரிகள் எத்தனை டைரக்டர்கள், எத்தனை டிபுடி டைரக்டர்கள், எத்தனை செகரட்டரிகள், எத்தனை அண்டர் செகரட்டரிகள், எத்தனை கட்டிடங்கள், எத்தனை ஏர்கண்டிஷன் சாதனங்கள், எத்தனை குடியிருப்பு வீடுகள்...." இப்படி அடுக்கிக் கொண்டே போனார் விக்ரம் சிங். "இதற்கெல்லாம் செலவாகாதா? அதையெல்லாம் எந்தக் கணக்கில் எழுதுவது? ஆக, பண்டத்தின் விலையை உயர்த்தித் தானே தீரவேண்டும்?"

இதை ஒப்புக் கொண்டு தலையாட்டுவதைத் தவிர எங்களுக்கு வேறு வழியில்லை. சரியான வாதம்தானே?

"இன்னும் ஒரே ஒரு சந்தேகம், விக்ரம் சிங்! இவ்வளவு விலை கொடுத்து யார் காய்கறிகளையும் தேங்காய்களையும் வாங்குவார்கள்? வாங்குவாரின்றி அழுகிவிடாதா அவ்வளவும்?"

"நோ நோ! அதற்கெல்லாம் இடம் கொடுப்போமா?" எங்களை நன்றாக மட்டம் தட்டிவிட்ட பெருமிதத்துடன் விக்ரம் சிங் தொடர்ந்தார்: "இந்தப் பண்ணையில் விளையும் காய்கறிகளைப் பயன்படுத்திக் கொள்ளவென்றே மத்திய சர்க்கார் புதுதில்லியில் ஹோட்டல் ஹர்ஷாவைக் கட்டிக் கொண்டிருக்கிறது. ஹோட்டல் ஹர்ஷா திட்டத்துக்காக இன்ஜினீயர்களும், ஐ. ஏ. எஸ். அதிகாரிகளும், டைரக்டர்களும், டெபுடி டைரக்டர்களும், செகரட்டரிகளும், அண்டர் செக்ரடரிகளும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்களுக்கான காரியாலயமும், ஏர்-கண்டிஷன் அறைகளும் உருவாகி வருகின்றன. சர்க்காரி பண்ணையில் விளையும் காய்கறிகள் தினந்தோறும் அதிகாலையில் 'காரவெல்' விமானத்தில் ஏற்றப்பட்டுப் புதுதில்லி போய்ச் சேரும். இதற்கென்றே பிரத்தியேகமாக ஒரு விமானம் புதிதாக வாங்கப்பட்டிருக்கிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!"

இந்த மகத்தான திட்டத்தை விவரிக்கையில் விக்ரம் சிங்கின் கண்கள் உற்சாகத்தால் பளபளத்தன.

அவர் சொல்லிக் கொண்டு போன ஜோரில் நான் அந்த வறட்டுச் சப்பாத்தியைக்கூடச் சாப்பிட்டு முடித்து விட்டேன்!

# படித்துப் பாருங்கள்!

## குழந்தைகள் கலைக் களஞ்சியம்

உங்களுக்குத் தெரியாவிட்டால் போகிறது உங்கள் குழந்தையிடம் கீழே உள்ள கேள்விகளுக்கு விடை கேளுங்கள்.

அரிக்கமேடு, ராப்ளீசியா, ஒட்டு மீன். —இவை எவற்றைக் குறிக்கும்?

குழந்தை டக்கென்று சரியான பதில் கொடுப்பான்: "தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் வெளியீடான குழந்தைகள் கலைக் களஞ்சியம் வாங்கிக் கொடு. படித்துப் பார்த்துப் பதில் சொல்கிறேன்!"

அரிக்கமேடு — புதுச்சேரியை அடுத்து அரியங்குப்பத்து ஆற்றின் கரையில் ஒரு மண் மேட்டின் கீழ் புதைந்து கிடக்கும் அழிந்து போன நகரம். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் மிகப் பெரிய துறைமுகப் பட்டினமாக விளங்கியது.

உலகிலேயே மிகப் பெரிய பூவைப் பூக்கும் தாவரம் ராப்ளீசியா. இப்பூவின் அகலம் மூன்றடி முதல் ஐந்தடி வரை இருக்கும்.

ஒட்டு மீன்: நண்டுக்குத்தான் இப்படியொரு பெயர். இறால், சங்கு நண்டு இவையும் கூட ஒட்டு மீன் இனம்தான். கெட்டியான ஓட்டிலுள்ள உடலைக் கொண்ட ஜீவராசிகளுக்கு ஒட்டு மீன் (இவை நீர்நிலைகளில் வசிப்பதால்) என்று பெயர்.

மேலை நாடுகளில் குழந்தைகளுக்கான கலைக் களஞ்சியங்கள் சிறியதும் பெரியதுமாக ஏராளமாக உள்ளன. வளர்ந்து வரும் நம் பாரதத்தில் கலைக் களஞ்சியம் தயாரிப்பு என்பது இலேசான காரியமல்ல. அதை இந்திய மொழிகளிலே முதலாவது முயற்சியாகச் செய்து முடித்த பெருமை தமிழ் வளர்ச்சிக் கழகத்துக்குத்தான் உண்டு. பெரிய அளவில் தமிழிலே கலைக் களஞ்சியத்தைப் பத்து பாகங்கள் வெளியிட்டுள்ளார்கள். அதை அடுத்துக் குழந்தைகளுக்கானதொரு கலைக் களஞ்சியத்தை உருவாக்கும் பணியையும் மேற்கொண்டார்கள். மத்திய, மாநில அரசாங்கங்களின் மான்யமும் யுனெஸ்கோவின் ஆதரவும் இதற்குக் கிட்டியிருக்கின்றன.

அறிவு வளர்ச்சிக்கு அவசியமானவற்றையும், தெரிந்து கொள்ளத் தக்கவைகளையும் விட்டு விடாமல் 'குழந்தைகள் கலைக் களஞ்சிய'த்தில் இடம் பெறச் செய்திருக்கிறார்கள். இந்தக் குட்டிக் கலைக் களஞ்சியமும் இந்திய மொழிகளிலேயே முதல் முயற்சி. இதுவரை இரண்டு தொகுதிகள் வெளிவந்திருக்கின்றன. நல்ல அமைப்பு. படிக்க வசதியான பெரிய எழுத்தில் ஏராளமான விளக்கப் படங்களுடனும், வண்ணச் சித்திரங்களுடனும் கவர்ச்சியான முறையில் தயாரிக்கப்பட்டிருக்கிறது. முதல் தொகுதியின் அட்டைப் பட அமைப்பைப் போல், இரண்டாவது தொகுதியின் அட்டைப் பட அமைப்பு சோபிக்கவில்லை. உள்ளே சில படங்களின் மீது விளக்கம் கறுப்பு எழுத்துக்களில் அச்சிடப்பட்டுள்ளது. அது படிக்கச் சிரமமாக இருக்கிறது. பெரிய முயற்சியில் இப்படிச் சிறு குறைகள் இருப்பது சகஜம்தான். அடுத்து வரும் தொகுப்புக்கள் அமைப்பிலும் விஷயச் சிறப்பிலும் மேலும் உயர்ந்து விளங்கும் என்பதை உணர முடிகிறது. தமிழ் நாட்டுக் குழந்தைகள் அதிர்ஷ்டசாலிகள்!

வெளியிட்டோர்: தமிழ் வளர்ச்சிக் கழகம் விற்பனை உரிமை: ஓரியண்ட் லாங்மன்ஸ் லிமிடெட், 36-ஏ, மவுண்ட்ரோடு சென்னை-2; விலை: ஒவ்வொரு தொகுதியும் ரூ. 10/- தலைமைப் பதிப்பாசிரியர்: பெரியசாமி தூரன்.

## குழந்தைகள் கைவேலை

காகிதத்திலே பறவை போன்றதோர் அமைப்பு. அதன் வாலை இழுத்தால் இறக்கைகள் மேலும் கீழும் தானாகவே இயங்கின. அடுத்த வீட்டுப் பையனிடமிருந்து கெஞ்சிக் கூத்தாடி அதை வாங்கி வந்திருந்தான் என் பையன். இது அவன் அப்பா செய்து கொடுத்ததாம். இதுபோல் இன்னும் விதவிதமாக எத்தனையோ கைவேலையெல்லாம் செய்து தருவாராம் அவர் தம் பையனுக்கு. என் பையன் என்னிடம் இதைச் சொல்லி 'இதைப் போலச் செய்வீயோ அப்பா?' என்றும் கேட்டான். எனக்கு ரொம்பச் சங்கடமாக இருந்தது. கல்வி அறிவோடு கைத் திறமையையும் வளர்த்துக் கொள்ளும் வாய்ப்பை நம் குழந்தைகள் பெற வேண்டும்; ஓய்வு நேரத்தை வீணாக்காமல் பயனுள்ள ஆக்க வேலைகளில் ஈடுபடச் செய்ய வேண்டும். இந்தப் பெரு நோக்குக்கு உதவும் விதமாக நாற்பதாண்டுகளுக்கும் மேலாக மாணவ சமுதாயத்துக்காகவே உழைத்த திரு கோ. நரசிம்மாச்சாரி என்ற பெரியார் தம் அனுபவ வாயிலாகக் குழந்தைகள் கைவேலை என்ற ஓர் அற்புதமான புத்தகத்தைத் தயாரித்திருக்கிறார் தமிழில்.

அடேயப்பா! எத்தனை விதவிதமான கைவேலைகள்! காகிதத்தை மடித்து, வெட்டி, ஒட்டி, பிரித்துச் செய்யும் அழகழகான அமைப்புகள்; பூவேலைகள், பாய் முடைதல், கம்பி வேலை, காகிதக் கூழ் வேலை, நாடா பின்னுதல், பூத்தையல் வேலை, பஞ்சு பொம்மைகள், நடக்கும் பொம்மைகள் - இவையெல்லாம் எளிய முறையில் லாகவமாகச் செய்ய ஏராளமான விளக்கப் படங்களுடன் சுலபமாக்கித் தந்திருக்கிறார். கைத்தொழில் கலையைப் பயிற்றுவிக்கும் ஆசிரியராகப் பணியாற்றியவர் ஆசிரியர். ஆகவே மாணவர்களுக்கு எந்த ஓர் இடத்திலும் சந்தேகமோ, குழப்பமோ ஏற்படாமல் செய்முறைகளைத் துல்லியமாக விளக்கிக் கைவினைகளை எளிதாக்கிக் கொடுத்திருக்கிறார். இப் புத்தகத்தில் கூறப்பட்டிருக்கும் பொருள்களைச் செய்வதற்கான மூலப் பொருட்களுக்கு எங்கேயும் தேடியலைய வேண்டாம். எல்லா நடுத்தரக் குடும்பங்களிலும் எளிதாகக் கிடைக்கும் பொருள்களைக் கொண்டே தயாரிக்கலாம். இனிய பொழுதுபோக்கு மட்டுமல்ல, பிற்காலத்தில் இவ்வகைக் கைவேலைகளினால் வருவாயைத் தேடிக்கொள்ளும் வாய்ப்பைக்கூட இது வழங்கும்.

இதே நூல் தெலுங்கில் வெளிவந்து மத்திய அரசின் பரிசைப் பெற்றிருக்கிறது. அடுத்து ஆங்கிலத்திலும் வெளிவந்துவிட்டது. இப்போது தமிழில் வெளிவந்திருக்கிறது. இந்திய மொழிகள் எல்லாவற்றிலும் வெளிவருவதற்கான தகுதி பெற்ற தரமான நூல் இது.

ஆசிரியர்: கோ. நரசிம்மாச்சாரி. வெளியிடுவோர்: ஓரியண்ட் லாங்மன்ஸ் 36-ஏ, மௌண்ட் ரோடு, சென்னை-2. விலை ரூ. 9.

- கௌசிகன்




★ இக் குறியிட்ட
கடிதம்
ரூ. 15/-
பரிசு பெறுகிறது.

அண்மையில் 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் ஓர் அன்பர் தாம் ஜப்பான் சென்று இருந்ததாயும், இந்திய சுதந்திர தினத்தன்று எக்ஸ்போ–70க்கு விஜயம் செய்ததாகவும் குறிப்பிட்டு, அங்கு இந்திய அரங்கம் எந்த அளவுக்கு அலங்கோலமாயிருந்தது என விளக்கியிருந்தார். இந்திய அரங்கின் சுவர்கள் நிறைய விரிசல்கள் விழுந்து விகாரமாய் இருந்தன; காட்சிப் பொருள்கள் மீதும், காண வந்தவர்கள் மீதும் மழை நீர் விழுந்து கொண்டிருந்தது; அரங்கிலிருந்த பெண் வரவேற்பாளர்களும், அதிகாரிகளும் பார்வையாளர்களை ஏறெடுத்தும் பார்க்கவில்லை; இதற்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல் ஒரு கிழிந்த இந்திய தேசியக் கொடி அரங்கின் உச்சியில் பறந்து கொண்டிருந்தது. (அன்று சுதந்திர தினமும்கூட) மாற்றார் நம்மைப் பரிகசிக்கும் வண்ணம் இந்திய அரங்கின் நிலைமை இருந்ததை அந்த அன்பர் இவ்வாறு விளக்கி யிருந்தார்.

நமது நாட்டு அலங்கோலங்களை அயல் நாடுகளுக்கு அம்பலப்படுத்தியதாக பி.பி.ஸி. மீது நடவடிக்கை எடுத்தவர்கள் எக்ஸ்போ 70–ல் இந்தியாவை மற்ற நாட்டவர் பரிகசிக்கும் வண்ணம் இந்திய அரங்கை மோசமாக வைத்திருந்தது ஏன் ?

சென்னை–4
20–10–70 எஸ். ஈசுவரன்

'இரு கோணங்கள்' சம்பாஷணையைப் படித்துப் பார்த்தேன். திரு ராஜகோபால், திரு சம்பத் இவர்களுக்கிடையே நிகழ்ந்த சம்பாஷணை பொதுமக்களுடைய அபிப்பிராயம், பாங்கு ஊழியர்களது மனோபாவம் இரண்டையும் வெளிப்படுத்தக் கூடியது. ஆனால் ஊழியர்களுக்காக அவர்களது காரியதரிசி என்ன சமாதானம் கூறினாலும் பாதிக்கப்பட்ட பொதுமக்கள், வியாபாரிகள் அதை மன்னிக்கவோ, ஒப்புக் கொள்ளவோ தயாராக இல்லை. அதைப் பற்றிய கவலைகூட ஊழியர்களுக்கு இல்லாமல் இருக்கலாம். ஆனால் ஒன்றை அவர்கள் (பொதுவாக அரசுத் துறை ஊழியர்கள்) மனத்தில் கொள்ள வேண்டும். தங்களது வாழ்க்கைத்தரம் உயர வேண்டும் என்று கூச்சலிடும் இவர்கள் பொதுமக்களின் உயர்வையும், தேவைகளையும் பற்றிச் சிந்திக்க வேண்டும். மக்களாட்சியில் அரசு ஊழியர்கள் தங்களை ஏதோ ஒரு தனி ஸ்தாபனத்தின் ஊழியர்கள் என்று நினைத்துக் கொண்டு, வேலை நிறுத்தம் என்ற பெயரில் பொதுமக்களைச் சங்கடத்தில் ஆழ்த்துவது, மக்களுக்குச் செய்யும் துரோகம் ஆகும். தங்களது அன்றாட முக்கியத் தேவைகளை நிறைவேற்றத் தவறும் அரசு ஊழியர்களிடம் சாதாரண குடிமகன் அதிருப்தியும், சங்கடமும் கொள்வானானால் அரசு ஊழியர்களிடத்தில் மக்கள் கொண்டுள்ள மதிப்பும், விசுவாசமும் போய் விடும். அரசு வேறு, மக்கள் வேறு அல்ல — ஜனநாயக நாட்டில். இதை அவர்கள் நினைவில் கொள்ள வேண்டும். 'நியாயமான எந்த உரிமைகளையும் கேட்க வேண்டாம்' என்று சொல்லவில்லை.

பழனி
16–10–70 ஜெ. ராமசாமி

திரு ராஜகோபாலுக்கும் திரு சம்பத்துக்கும் இடையே நடந்த சம்பாஷணையை 18-10-70 தேதியிட்ட கல்கியில் படித்தேன். தங்களுடைய சங்கம் அரசியல்வாதிகள் கலக்காத சங்கம் என்று கூறி திரு சம்பத் பெருமைப்பட்டுக் கொள்கிறார். எனக்குத் தெரிந்த தகவலின்படி, அகில இந்திய பாங்கு ஊழியர் சங்கத்தின் பொதுக் காரியதரிசி திரு பிரபாத்கர் ஒரு கம்யூனிஸ்ட். சென்ற தேர்தலில் வலதுசாரி கம்யூனிஸ்ட்களின் ஆதரவுடன் பாராளுமன்றத் தேர்தலில் நின்று தோற்றார். இதற்கு திரு சம்பத் என்ன விளக்கம் தருகிறார் ?

திருநெல்வேலி
16-10-70 ஒரு வாசகர்

★ திருச்சி வானொலி நிலையத்திலிருந்து 21–10–70 அன்று மாலை 6–45 மணிக்கு ஒலிபரப்பப்பட்ட கிராம நிகழ்ச்சியில் இடம் பெற்ற ஒரு காலட்சேபம் மக்களிடையே எவ்வளவு தவறான, தீய கருத்துக்கள் பரப்பப்படுகின்றன என்பதற்கோர் அத்தாட்சி. நிகழ்ச்சி, குடும்பக் கட்டுப்பாட்டைப் பற்றியது. குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தைக் கேள்வியுற்ற ஒரு கிராமவாசிக்குச் சந்தேகம். அவன் கேட்கிறான்: "ஏன் ஐயா ! காந்தி மகான் சொல்லியிருக்கிறாரே, (அதுபோல் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டால் என்ன?" அதற்கு இன்னொருவர் பதில் அளிக்கிறார்: "மனத்தைக் கட்டுப்படுத்தவா முடியும்? வா, மனத்தைக் கட்டுப்படுத்த முடியாது எனக் காட்டுகிறேன்." அவர் அவனை அழைத்துச் செல்கிறார். முடிவில் கிராமவாசியும், 'மனத்தைக் கட்டுப்படுத்த முடியாது' என ஒப்புக் கொள்கிறான். 'இப்ப நான் மனுஷனாகிப் போனேன்' என்ற கோரஸுடன் நிகழ்ச்சி முடிகிறது. நம் நாடு ஆன்மிக நாடு. நமது பண்பாடே மனத்தை அடக்கி மனிதனாக வாழ்வதுதான். இதனால்தான், காந்தியடிகளும் 'மனத்தை அடக்குவது' என்ற அரிய உண்மையைப் போதித்தார். அடிகளின் வாக்கு 'நடைமுறைக்கு ஒவ்வாதது' என்ற முடிவுக்கு வருவோமானால், காந்திக்குச் சிலை, காந்திக்கு நூற்றாண்டு விழா, — இவைகளில் என்ன அர்த்தம் இருக்கிறது?

மதுரை – 19
21–10–70 எம். விசுவநாதன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# இதோ, ஒரு தீமையற்ற தலைவலி மாத்திரை!



# அவேதன்®

அற்புத 'எபெப்' அடங்கியது:
(என்-அஸிடில்-பி-எமினோஃபினால்)



தலைவலி மாத்திரை ஏதாவது தீங்கு விளைவிக்குமோ என்கிற பயத்தால், நாம் எத்தனையோ தடவை தலைவலியைப் பொறுத்துக் கொண்டு அவதிப்படுகிறோம்.

ஆனால் அப்படி அவதிப்பட வேண்டாம். அவேதன் தீமையில்லாமல் தலைவலியைப் போக்குகிறது. ஏனெனில், அவேதனில் அற்புத 'எபெப்' அடங்கியுள்ளது. அவேதன் சாப்பிட்ட பின் எவ்வித துன்பகரமான பின் விளைவுகளும் ஏற்படாது; துரிதமான நிச்சய நிவாரணம் கிடைக்கும்.

எனவே, தீமையற்ற முறையில் தலைவலியைப் போக்குங்கள். ஜலதோஷம், ஃப்ளு மற்றும் இதர வலிகளையும் நோவுகளையும் கூடத்தான்! 'எபெப்' அடங்கிய அவேதன் சாப்பிடுங்கள்.

**2 டேப்லெட்டுகள்: 15 பைசா.**

அவேதன்—அற்புத 'எபெப்' அடங்கியது. தலைவலி, ஜலதோஷம், மற்றும் ஃப்ளுவிலிருந்து தீமையற்ற நிச்சய நிவாரணம் அளிக்கிறது.





SQUIBB SARABHAI CHEMICALS

* இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட்டின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்கைக் குறிக்கிறது. காரமசந்த் ப்ரேம்சந்த் பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

Shilpi HPMA-37/70 Tam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon